Regd. No. 2975.

ஸ்ரீ :

# SRI RAMANUJAN

**Editor:** P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

# ஸ்ரீ ராமாநுஜன் 270

ஆசிரியர் : P. B. அண்ணங்கராசாரியர்.

வருஷச் சந்தா ரூ. 8. ஜீவியச் சந்தா ரூ. 58.

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி *—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

10-2-1971ல் வெளியிடப்பட்டது.

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 270.



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் சார்பாக மாதந்தோறும் வெளிவருவது

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 23 | 10—2—71ல் வெளியிட்டது. | ஸஞ்சிகை 3

## ஆசிரியரின் அறிக்கை.

முக்கியமாக இங்குச் சில விஷயங்கள் தெரிவிக்கப்படுகின்றன. ஸ்ரீராமாநுஜன் அபிமானிகள் யாவரும் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறோம். நாம் வைத்துக்கொண்டிருந்த "சந்தாதாராகளின் அட்ரஸ்லிஸ்டு" என்கிற புத்தகம் கைசோர்ந்துவிட்டது. ஏதோ சில பழைய லிஸ்டுகளைக்கொண்டு இப்போது இச் சஞ்சிகை அனுப்பப்படுகிறது. 1969 ஆம் வருடத்தில் "அனைவரும் 25 ரூ. செலுத்தி ஜீவியச் சந்தாதாரர்களாகச் சேரவேண்டும்" என்று நாம் கோரியிருந்தபடி செலுத்தியவர்களின் விலாசங்களை நாம் ஸ்ரீ ராமாநுஜனிலேயே (மூன்று இதழ் களில்) வெளியிட்டிருந்தபடியால் அந்த விலாசங்கள் மட்டும் நம்மிடத்தில் நழு வாமலிருக்கின்றன. அவர்களுக்கு இப்போது போலவே எப்போதும் அனுப்பி வருவோம். சிலர் பிறகு ரூ. 25 20, 10, 8, 5...இவ்விதமாக அனுப்பிய தொகைகள் அச்சிடப்படாமல் கார்யஸ்தருடைய கைக்குறிப்பில் மட்டுமிருந்தன. அந்தக் குறிப்புதான் கைசோர்ந்து விட்டது. M. O. கூபன்கள் சிலவற்றைச் சிரமப் பட்டுச் சம்பாதித்து இச்சஞ்சிகையை அனுப்பி யிருக்கிறோம். இதனால் சிலர்க்கோ பலர்க்கோ சஞ்சிகை கிடைக்கத் தவறியே இருக்கும். அன்னவர்கள் 270 லக்க முள்ள ஸ்ரீ ராமாநுஜன் தங்களுக்குக் கிடைக்கவில்லை யென்பதை ஒருவாறு தெரிந்துகொண்டு நமது கார்யாலயத்திற்குத் தங்கள் முழுவிலாசத்தையும் இன்ன தேதியில் இவ்வளவு பணம் செலுத்தினோமென்பதையும் தெரிவிக்க வேண்டியது. அப்படி தெரிவியாமலிருப்பவர்களுக்கு இனி பத்ரிகை கிடைப்பதரிதே. .... *

---

## மற்றோர் அறிக்கை.

முமுக்ஷுப்படி ஸாரார்த்ததீபிகை, உபதேச ரத்தினமாலையுரை, திருவாய் மொழி நூற்றந்தாதியுரை, ஆர்த்திப்பிரபந்தவுரை இவை ஸ்ரீ ராமாநுஜன் மூல மாகவே வெளியிடப்பட்டுவிட்டன. தத்வத்ரயார்த்த ஸாரமும் ஸ்ரீவசனபூஷணார்த்த ஸாரமும் இன்னும் வெளியிடப்படவில்லை. சென்றவிதழில் (269ல்) "அன்பர்களுக்கு அறிக்கை" என்ற தலைப்பில் "ஸ்ரீவசனபூஷண ஸாரார்த்ததீபிகை அடுத்த இதழில் வெளியிடப்படும்" என்று தெரிவித்திருந்தோம். அப்படி யிருந்தும் பலர் தாமதம் பொருமல் ஸத்வாரகமாயும் அத்வாரகமாயும் பெற்றுப் போயினர். அப்புத்தகம் கனத்ததாகையால் மாதப்பத்திரிகை அனுப்புகிற முறையில் அனுப்புவது எளிதாக இல்லை. ஆகவே இப்போது திடமாகத் தெரிவிப்பதாவது, ஸ்ரீவசனபூஷணஸாரம் மட்டும் வேண்டியவர்கள் 50 பைஸா ஸ்டாம்பு வைத்து அனுப்பவேணும். தத்வ த்ரயஸாரமும் வேண்டியவர்கள் 75 பைஸா ஸ்டாம்பு வைத்து அனுப்பவேணும். நேரில்பெறும் சந்தாதாரர்கள் பைஸா இல்லாமலே பெறுவர். ... ... *

---

## திருப்பாவை ப்ரவசனங்கள்.

சென்னைமாநகர் முதலானவிடங்களில் மார்கழி மாதந்தோறும் சூடிக்கொடுத்த சுடர்க்கொடி யருளிய திருப்பாவையின் ப்ரவசனங்கள் பல தலங்களிலும் நடை பெறுவதுண்டே; இவ்வாண்டிலும் அங்ஙனமே குறையற நடைபெற்றதென்பதை யறிந்து மகிழ்ச்சியுடனறிவிக்கின்றேன். சென்னை நகரில் மட்டுமன்று; தமிழ் நடையாடும் தேசங்கள் எவ்வளவுண்டோ, அவ்வளவிலும்; அவ்வளவேயன்று; ஸ்ரீ வைஷ்ணவர்கள் மலிந்த நெல்லூர் ஜில்லா, குண்டூர் ஜில்லா. க்ருஷ்ண ஜில்லா' கோதாவரி ஜில்லா, ஹைதராபாத், மைஸூர், பெங்களூர் ப்ராந்தம் முதலான விடங்களிலுங்கூட இந்த ப்ரவசனம் விசேஷமாக நடைபெற்றபடியை ஆங்காங் குள்ள ஆப்தர்களின் கடிதங் களினாலும் வ்ருத்தாந்த பத்திரிகைகளினாலும் அறிந்து அகமகிழ்கிறோம். மூவாயிரப்படி ஆறாயிரப்படி யென்கிற பூர்வாசார்ய வியாக்கி யானங்களை வரியடைவே ஸேவித்து ப்ரவசனம் செய்யும் காலக்ஷேபமுறை தொன்று தொட்டுப் பல திவ்யதேசங்களிலும் சில அக்ரஹாரங்களிலும் நிகழ்ந்து வந்ததுண்டு. அந்த பத்ததி மெலிந்து உபந்யாஸ பத்ததி மலிந்துவிட்டது. அது அதிக்ருதாதிகாரமாய் இது ஸர்வாதிகாரமா யிருக்கையாலே காலத்திற்கு ஏற்ற தாகிறது.

சென்னைமாநகரில் சாரிடிகள் என்கிற தர்மஸ்தாபனங்கள் ஏற்படாத காலத்தில் அங்குத் திருப்பாவை ப்ரவசனம் அடியோடு இல்லாதிருந்தது நமக்குத் தெரியும். 1905, 1909......ல் கீர்த்திமூர்த்திகளான ஸ்ரீமதுபயவே. திருக்கண்ண புரம் பட்டப்பா ஸ்வாமி, ப்ரஹ்மஸ்ரீ பண்டிட் லக்ஷமணாசார் போன்ற சில மஹான் களே இத்தகைய ப்ரவசன பத்ததியை ஆரம்பித்தார்களென்று தெரியவருகிறது வித்வத் ஸார்வபௌமரா யெழுந்தருளியிருந்த ஸ்ரீமத் திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை. ஸ்ரீ ரங்காசார்ய ஸ்வாமி ச்லோகரூபமாக அருளிச்செய்த திருப்பாவையை.

வைத்துக்கொண்டு பண்டிட் லக்ஷ்மணுசார் ப்ரவசனம் செய்துகொண்டிருந்ததை நேரில் கண்டிருக்கிறேம். "செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால் எங்குந் திருவருள் பெற்றின்புறுவர்'' என்று ஆண்டாளருளிய திருவாக்கு சதமுகமாகவும் ஸஹஸ்ரமுகமாகவும் பலித்துவரக் காண்கையாலே இந்த ப்ரவசன கோஷ்டிகளுக்கு நாளடைவில் அபிவிருத்தியே யொழியக் குறையேதும் வாராது.

---

## — கடிதங்கள் —

# மன்னனும் மாமுனியும்.

(ராஜமன்னர் ஸன்னிதி நிருபம்)

யதீந்த்ரர் அபிமானித்தது திருநாராயணபுரம். யதீந்த்ரப்ரவணர் அபிமானித்தது இராஜமன்னர்கோயில். இந்த மன்னர்குடியை நம்மாழ்வாரும், சரித்திரக் கல்வெட்டுகளும் 'வண்டுவராபதி' என்று கூறுவது. புராணம் 'சம்பகாரண்யம்' என்றும் 'தென் துவரை' என்றும்கூறும். ஸ்தலபுராணப்படி இது 108 விஷ்ணு ஸ்தலங்களில் ஒன்ருகும். 'தீர்ப்பாரையாமினி', மாசறுசோதி' என்ற இரு திருவாய்மொழிகளால் நம்மாழ்வார் இப்பதியைப் பாடியிருக்கிருர். கோபால விம்சதியும், கமலாஸ்துதியும் மணவாள மாமுனிகளின் அனுபவஜனிதமான க்ரந்தங்கள். மாமுனியளித்த கோபாலனுக்கு ப்ரதிவாதி பயங்கரம் அண்ணு மங்களம் பாடினுர். ஆக இந்த க்ஷேத்ரம் ப்ரம்மாதி தேவதைகளாலும், ருஷிகளாலும், ஆழ்வார்களாலும், ஆசார்யர்களாலும் புகழப்பட்ட ஒரு சிறந்த திவ்யதேசமாகும்.

நம்மாழ்வாரால் தொழப்பட்ட 'வண்டுவராபதி மன்னன்', 'மணிவண்ணன்' 'வாசுதேவன்', 'மணியிலணிநிறமாயன்' என்று இவ்வூரில் எழுந்தருளியிருக்கும் நான்கு அர்ச்சாமூர்த்திகளின் அஸாதாரணத் திருநாமங்கள், இவர்களையே குறிக்கும் என்பது சதுர்யுகங்கண்ட இம்மூர்த்திகளின் பத்மாஸனங்களில் பொறிக்கப்பட்டுள்ள விபரங்களிலிருந்தும், இற்றைக்கு ஆயிரம் வருஷங்களுக்கு முன் ராஜாதிராஜசோழன், முதலாவது குலோத்துங்கசோழன் காலத்தில் பொறிக்கப்பட்டுள்ள இக்கோயிலின் கல்வெட்டுகளிலிருந்து ஸித்திக்கிறது. ஸ்ரீமணவாளமாமுனிகள் 'தீர்ப்பாரையாமிளி', 'மாசறுசோதி'த் திருவாய்மொழிகளை இந்தத் திவ்யதேசத்தில் நித்யானுஸந்தேயமாக நியமிந்தருளினுர் என்பதுதான் பழநடை விளக்கம், கர்ணபரம்பரை; அபிமானத்தால் நூதனமாகக் கற்பித்ததொன்றல்ல.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் ராதை இடம்பெறவில்லை. ஆனுல் மணவாளமாமுனிகள் இத்தலத்தில் நித்யவாஸம் செய்தருளினபோது, வண்டுவராபதி மன்னன், ஸ்வாமிக்கு ராதாகிருஷ்ணனுக ஸேவைஸாதித்த க்ரமம் இவருடைய கோபால விம்சதி 8 வது சுலோகத்தில் அனுபவிக்கப்படுகிறது. அர்ச்சையிலும் இவருக்கு அபிமுகமாக ராதாகிருஷ்ணன் பிம்பரூபமாக ஸேவை ஸாதித்துக் கொண்டிருக்கிருர்.

வண்டுவராபதி மன்னனுக்கு 'ஸ்ரீவித்யாராஜகோபாலன்' என்பது புராணப் பெயர். ஸ்ரீவித்யாசக்ரத்திற்கு அதிஷ்டான தேவதை வேணுகோபாலன்.

ஸ்ரீபாஷ்ய ஸிம்ஹாஸநாதிபதியான ஸ்ரீவாதி பீகரர்க்கு, ஸ்ரீரம்யவரயோகி யிடமிருந்து லப்தனான கோபாலனுக்கு அண்ணா மங்களம்பாடியிருக்கிறார். இது இவ்வூரில் அநுஸந்திக்கப்பட்டு வருகிறது. அண்ணா வம்சஸ்தர்களும் தீர்ப் பாரையாமினியைத் திருமாளிகைகளில் நித்யமாக அநுஸந்திக்கிறார்கள். இதி லிருந்து அண்ணாவுக்கும் ஆசார்யலப்தனான கோபாலனிடத்திலுள்ள ப்ராவண்யம் புலப்படும்.

இப்படி இத்தலத்தின் விசேஷ ஸம்பந்தியான மாமுனிகளுக்கு இங்கு இவ் வருடம் ஐப்பசித் திருமூலம் ஆறுவது நூற்றாண்டு நிறைவு விழாவாகக் கொண் டாடப்பட்டது. 10 நாள் வேதம், திவ்யப்ரபந்தம், ஸ்தோத்ரபாடங்கள் பாரா யணம் செய்யப்பட்டது திருநக்ஷத்திரத்தன்று ஸ்வாமி திருமஞ்சனங்கண்டருளி காலை வாத்ய விசேஷங்களுடன் திருவீதிவலம்செய்து தாயார், பெருமாள், ஸேனை முதலியார், நம்மாழ்வார், உடையவர் ஸன்னிதிகளில் மங்களாசாஸனம் செய்தரு ளினார். பிறகு எம்பெருமானாரும், மாமுனிகளும் சேர்ந்து புறப்பாடாகி, மாமுனிகள் ஸந்நிதிக்கு எழுந்தருளினார்கள். அங்கு அருமறையின் பொருள் அருள் கொண் டாயிரமின் தமிழால் பாடிய சடகோபன் நடுவில் வீற்றிருக்க, ஒருபக்கம் மாற னுரைசெய்த தமிழ் மறைவளர்த்த யதீந்த்ரரும், மற்றொரு பக்கம், மாறன்மறைப் பொருளை நன்குரைக்கும் ஈட்டை அரங்கேசற்களித்த யதீந்த்ரப்ரவணரும் அஞ்சலி ஹஸ்தராய் வீற்றிருக்க, பார்ச்வத்தில் அஷ்டதிக்கஜங்களும் சித்ரரூபமாய்க் கால க்ஷேபங்கேட்ட காட்சி, அன்று அரங்ன் முன்னால் ஆவணி மூலத்தில், ஈடு சாற்று மறை காட்சியை விஞ்சியது என்று சொல்லலாம்படி யிருந்தது. அன்றிரவு சேஷ வாகனத்தில் சேஷாவதாரன் வீதியுலா எழுந்தருளி கோபாலன் முன்னிலையில் ஸ்ரீ. உ. வே. எம்பார் விஜயராகவாச்சாரியார் ஸ்வாமியின் மணவாளமாமுனி வைபவத்தைக் கதாகாலக்ஷேபமாகக் கேட்டருளினார் மறுநாள் இயற்பாசாற்று முறையும் விமரிசையாக நடந்தேறியது.

இவ்விழாவையொட்டின விசேஷங்கள் பின்வருமாறு.

(1) தர்மகர்த்தா குழுத்தலைவர் சேரங்குளம் பெரியபண்ணை ஸ்ரீ. உ. வே. K. R. ராஜகோபாலய்யங்கார் ஸ்வாமி, தர்மகர்த்தா ஸ்ரீ T. S. சாமினாத உடையார், M.L.A., அவர்கள், கோயில் நிர்வாக அதிகாரி இவர்களுடைய அபாரமான முயற் சியும், ஒத்துழைப்பும்.

(2) சுமார் ரூ. 700/- செலவில் தங்கமுலாம் பூசின ஆதிசேஷ பணா முடி ஸமர்ப்பித்தது. ஸ்ரீ உ. வே. மாடபூசி திருமலை அய்யங்கார்ஸ்வாமி.

(3) அஷ்டதிக்கஜங்களைச் சித்திர ரூபமாக ரூ. 250/- செலவில் ஸமர்ப் பித்தது, ஸ்ரீ உ. வே. நம்மங்குரிச்சி ஸ்ரீனிவாஸய்யங்கார்ஸ்வாமியும், ஸ்ரீ. உ. வே. ஏத்தக்குடி ராகவாச்சார்ஸ்வாமியும்.

(4) கோபாலவிம்சதி, கமலாஸ்துதி, கோபாலன் மங்களம் தீர்ப்பாரை யாமினி, மாசறுசோதி இவைகளை ரூ. 100/- செலவில் திருமதி செங்கமலத்தம் மாள் எழுதுவித்தார்கள்.

(5) ரூ. 250/– செலவில் இரவில் சேஷவாகனப் புறப்பாடு தேவங்கு திரு. J. பார்த்தசாரதி நாயுடு அவர்களின் உபயம்.

(6) ஸ்ரீ உ. வே. எம்பார்ஸ்வாமி கதாகாலக்ஷேபத்தை ஏற்பாடு செய்து, திருநக்ஷத்திரக் காலேவேளை புறப்பாடு, சாற்றுமுறை, ஸகல கைங்கர்யபரர் களுக்கும் விசேஷ ஸம்பாவனை, இவைகளைச் செய்து உபகரித்தவர் இவ்வூரில் மஹநீயரான ஸ்ரீ உ. வே. A. ஸ்ரீனிவாஸய்யங்கார்ஸ்வாமி.

(7) ஸ்தானீக அர்ச்சகர்களின் விசேஷ சிரத்தையால் 10 நாள் உபயங் களும் செழிக்க நடந்தேறின.

மாறன் மடலும் வெறிவிலக்கும் மாமுனிதன்
தேறல் கமலைத் திருத்துதியும் — ஊழிவரும்
கோபால விம்சதியும் வண்டுவரைக் கோனென
கோபால னுக்கான கூற்று.

தீர்ப்பாரை யாமினியில் மாசறுசோ திப்பத்தில்
சேர்ப்பன் தென்துவரைச் சீமானை — ஓர்ப்பனெனச்
சொன்ன மணவாள மாமுனியே தொல்லுலகில்
இன்னமொரு நூற்றாண் டிரும்.

---

ஸ்ரீ:

பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸ்ரீ பேரருளாள

## யதிராஜ ராமாநுஜ ஜீயருக்கு

## டில்லியில் குதூகல வரவேற்பு

(ஸ்ரீமான் A. ராமாநுஜாசாரியர், புது டில்லி.)

உத்தமாச்ரம ஸ்வீகாரம் செய்து கொண்ட பிறகு முதன் முதலாகத் தலை நகருக்கு எழுந்தருளியிருந்த ஸ்ரீபெரும்பூதூர் ஆதிகேசவ—ஸ்ரீ பாஷ்யகாரர் சன்னிதி தர்மகர்த்தா ஸ்ரீ பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ பேரருளாள யதிராஜ ராமாநுஜ ஜீயருக்கு டில்லி ஆஸ்திகர்கள் சார்பாக 3—1—71 ஞாயிறன்று ஒரு வரவேற் பளிக்கப்பட்டது. அவ்விழா, நூதன பிரதிஷ்டை செய்யப்பட்ட "ஸ்ரீராம மந்திர்" என்கிற சக்ரவர்த்தி திருமகன் திருக்கோயிலில் ஸ்ரீ ஜஸ்டிஸ் L. R. நரசிம்மாச்சார் ஸ்வாமி அத்யக்ஷதையில் இனிது நடந்தது. அச்சமயம் டில்லி ஹைகோர்ட் ஜட்ஜ் ஸ்ரீ டி. வி. ஆர். தாதாசாரியர், ஸ்ரீ பி. வி எஸ். அய்யங்கார், ஸ்ரீ டி. ஸி. ஏ. ஸ்ரீநிவாச வரதாச்சாரி முதலான பெரியோர்கள் பிரசன்னமாயிருந்தனர்.

ஸ்ரீ ராமன் சன்னிதி வாசலில், ஸ்ரீ சடகோபன், பரிவட்டம், மாலை முதலிய கோயில் மரியாதைகளுடன் வேத கோஷத்தோடு ஸ்ரீ ஜீயருக்கு ஸுஸ்வாகதம் செய்யப்பட்டு அவர் சன்னிதிக்கு அழைத்துச் செல்லப்பட்டார். சக்ரவர்த்தி திருமகன், சீதாபிராட்டி, இளைய பெருமாள் உடையவர் எல்லோரையும் மங்களா

சாஸனம் செய்து உத்தர பாரதத்திலேயே மிக உயர்ந்த திருக்கோலத்துடன் சேவை சாதிக்கும் சிறிய திருவடி சன்னிதி வாசல் மண்டபத்திற்கு எழுந்தருளி அவரையும் தண்டனிட்டு, பிறகு அங்கு கூடியிருந்த ஸ்ரீ வைஷ்ணவ குழாங்களுக்கு "இராமாநுசனும் திருப்பாவை"யும் என்ற விஷயத்தைப்பற்றி நம் ஜீயர் பரக்க உபந்யசித்தார்.

ஸ்ரீ ஜீயருக்கு ஸ்வாகதம் கூறின ஸ்ரீ ஜஸ்டிஸ் ஆர். எல். நரசிம்மாச்சார் ஸ்வாமி, அவர் நம் சமூகத்திற்கு ஆற்றிவரும் தொண்டைப் பாராட்டி சமஸ்கிருதத்தில் பேசினர். "ஒரு க்ராமம், பட்டிணம் அல்லது கோயில் ஜீயர் போன்ற மஹாத்மாக்களால் மங்களாசாஸனம் செய்யப்பட்டதும் ஒரு தீர்த்தஸ்தானம்—அல்லது புண்ணிய க்ஷேத்திரமாகி விடுகிறது. புதிதாக ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் நம் சன்னிதியும் ஸ்ரீ ஜீயர் எழுந்தருளி மங்களாசாஸனம் செய்ததால் ஆழ்வார் பாடல் ஸ்தலம் போல் பவித்திரமாகி விட்டது" என்று ஸ்ரீ நரசிம்மன் புகழுரையாற்றினர்.

அடியேன் (ஏ. ராமானுஜாசாரி) பேசுகையில் ஸ்ரீ ஜீயர் திருமாலிருஞ்சோலை அழகர் கோயில் கேசில் மிகவும் பாடுபட்டு அச்சன்னிதியை பரசமயத்தினர் சேஷ்டைகளினின்று விடுவித்ததையும், நம் மணவாளமாமுனிகள் ஆருவது நூற்ருண்டு பூர்த்தி விழாவின் சாச்வத ஞாபகார்த்தமாக தேசத் தலைநகரில் எம்பெருமானர் திவ்யமங்கள விக்ரஹ பிரதிஷ்டை செய்ய நம் ஜீயர் செய்த உபகாரத்தையும் குறிப்பிட்டு ஜீயர் மேன்மேலும் நம் தர்சனப் பிரவர்த்தனம் செய்ய அவருக்கு 120 ஸம்வத்ஸர ஆயுளையும் திடகாத்திர சுகத்தையும் அளிக்குமாறு ஸ்ரீ சீதா சமேத ராமபிரானை பிரார்த்தித்தார்.

டில்லி ஸ்ரீ வைஷ்ணவர்கள் சார்பில் ஸ்ரீ P. V. S. அய்யங்கார் ஸ்வாமி, ஸ்ரீ ஜீயருக்கு ஒரு உயர்ந்ததான சால்வையைப் போர்த்தளித்தார்.

ஸ்ரீ பேரருளாள யதிராஜ ஜீயர் தமது உபந்யாஸ முடிவில் சமீபத்தில் தமிழ் நாடு அரசு நிறைவேற்றியிருக்கும் "அர்ச்சக சட்டம்" அர்ச்சக கைங்கர்யத்திலீடுபட்டிருப்பவர்களுக்கு ஹானியை விளைவிப்பதோடு சாஸ்திர விரோதமுமானது என்றும் அதை அமுலில் கொண்டுவராதிருக்க உடனடியாக நடவடிக்கைகள் எடுக்கவேண்டியது அவசியம் என்றும் வற்புறுத்தினர். ஸ்ரீ R. T. கிருஷ்ணய்யங்கார் வந்தனோபசாரம் கூற கூட்டம் இனிது கலைந்தது.

## ஸ்ரீ யதிராஜ ஜீயர் ஸ்வாமிகளின் முயற்சி வெற்றிபெற்றது.

ஸ்ரீ ஜீயர் ஸ்வாமிகள் நேற்று மார்கழி மாதத்தில் ஆகாசவிமானம் வழியாக டில்லிக்கு எழுந்தருளின காரணம்—தர்மவிருத்தமாகத் தோன்றியுள்ள புது சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவரவொட்டாதபடி செய்யவேணுமென்பதே. அதற்காக அவ்விடத்து ஸுப்ரீம் கோர்ட்டில் ரிட் தாக்கலாகி, தாத்காலிகமான தடையுத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிற தென்பதை தேசீயப்பத்திரிகைகள் பல வற்றாலும் உலகமறிந்திருக்கின்றது. ... ... ... *

# "நம் திருப்பாவைப் பெருக்கர்"

[திரு. நா. வேணுகோபால் நாயகர், பி.ஏ., பி,எல்., உதவி இந்தியக் கைவண்ணக் கழகம். காரியதரிசி; ஸ்ரீ வைஷ்ணவ மகா சங்கம்.]

13—1—71 திருப்பாவை சாத்துமுறை கோஷ்டியில் பேசினது.

உயர்வற உயர்நலம் உடைய உடையவரது தரிசனத்தை,
மயர்வற மதிநலம் அருளப்பெற்ற மணவாளமாமுனிகளின்

திருவடிகள் துணைக்கொண்டு

அயர்வறும் அமரர்கள் அதிபதியான தேவாதிராஜனின் திருவடிவாரத்தில் நித்யவாசம் புரியாநிற்கும் நம் ஜகதாசார்யசிம்மாசனாதிபதி, பாரத பண்டிதமணி, பெருமாள் கோயில் பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீ அண்ணங்கராசார்ய சுவாமிகள், நாடும் நகரமும் நன்கு அறியலாம்படி பரப்பி நிலைநாட்டவேண்டுமென்கிற ஒரே குறிக்கோளுடன் சென்ற அரை நூற்றாண்டுக் காலத்திற்கும் அதிகமாக ஆற்றி வரும் அரிய தொண்டு ஊரும், உலகமும் அறிந்த உண்மையாகும். தற்காலத்தில் எம்பெருமானார் தரிசனத்தைப் பொலிந்து விளங்கச் சேவை புரிந்துவரும் பெரியார் களுள் காஞ்சி ஸ்ரீ அண்ணங்கராசார்ய சுவாமிகள் தலைசிறந்தவராவார். ஒப்பாரும் மிக்காரும் இல்லாத மஹா வித்வானான இவரது சேவைக்கே உரித்தான சிறப்பு களை ஸ்ரீ வைஷ்ணவ உலகமுழுதுமறியும்.

கீழ்நாட்களில் சில பெரியார்கள் மூலமாக ஆண்டாள் ஒரு கற்பனைப் பாத்திரமே யொழிய உண்மையாக அவதாரம் செய்தவளல்லள் என்றும், திருமால் தாமச குணமுடையவர், உறங்குபவர் என்றும் வாதங்கள் எழுந்த சமயங்களிலும், "தீக்குறளை சென்றோதோம்" என்ற திருப்பாவைச் சொற்றொடருக்குத் திரித்துப் பொருள் எழுந்தபோதும், "இவைகளை எழுப்பின பெரியார்கள் யாராயினும் சரியே!" என்று அஞ்சாநெஞ்சுடன், ஆணித்தரமாகப் பதில் தந்து, வெற்றிக்கொடி நாட்டியவர் ஸ்ரீ அண்ணங்கராசார்ய சுவாமிகளே ஆவார்!

இராமாநுச தரிசனத்தைத் தம் நாவால் பரப்புவதோடு அமையாமல், பேனா வாலும் தமிழ், தெலுங்கு, வடமொழி, ஹிந்தி மொழிகளில் பரப்பிவரும் இவர்தம் சீர்மைக்கு எல்லை உண்டோ! சுமார் 300 திங்களாகத் தமிழில் வெளியிட்டுவரும் தமது ஏட்டிற்கு "ஸ்ரீராமாநுஜன்" என்று திருப்பெயர் சூட்டியிருப்பது இவரது அசாதாரண மேதாவிலாசத்திற்கு ஒரு எடுத்துக்காட்டாகும்.

இராமாநுசருக்குப் பல சிறப்புத் திருநாமங்கள் உண்டு. சுவாமி எம்பெருமானார், உடையவர், ஸ்ரீ பாஷ்யகாரர், கோயில்அண்ணன் என்பன அவைகள். இவற்றுள் சிகரமாக விளங்குவது திருப்பாவை ஜீயர் என்பதேயாகும்.

தமது ஆசார்யரான பெரிய நம்பிகளுடைய திருமகளாரான 'அத்துழாய்' தன் செந்தாமரைக் கையால் சீரார் வளையொலிப்ப வந்து திருக்கதவம் திறந்து மாதுகரம் சமர்ப்பிக்கப் போகையில், எம்பெருமானார் அவளை நந்தகோபாலன்

மருமகளான நப்பின்னை நங்கையாகவே பாவித்துத் தரையில் விழுந்து வணங்கின வரலாற்றை அறியும்போது, ஜீயரான உடையவரின் திருவுள்ளம் திருப்பாவைச் செல்வியான ஆண்டாளின் திருவுள்ளமாகவே மலர்ந்திருந்ததைக் காண்கிறோம்! உணர்கிறோம்! இந்த ஒன்றிய உணர்ச்சியினால்தான் திருவரங்கம் பெரியகோயி லில் திரு அத்யயனத் திருவிழாக் காலத்தில் ஆண்டாளின் பாசுரங்களை அரையர் சுவாமிகள் சேவிக்கையில், அவற்றிற்கான மரியாதைகளை அரங்கர்மௌலிசூழ் கின்ற மாலையைச் சூடிக்கொடுத்தவள் தொல்லருளால் வாழ்கின்ற வள்ளலும், திருப்பாவை ஜீயருமான ஸ்ரீ உடையவரே ஏற்று அருள்கின்றார்.

பாதகங்கள் தீர்க்கும் இத்திருப்பாவையை, பரமனடி காட்டும் இத்திருப்பாவையை, வேதமனைத்துக்கும் வித்தாகும் இத்திருப்பாவையை, கோதை தமிழான இத்திருப் பாவையை,அறியாத மானிடர்கள் வையத்தில் இருக்கலாகாது என்ற பெரிய திரு வுள்ளத்தினால், திருப்பாவைக்குத் தமிழ், தெலுங்கு, ஹிந்தி, வடமொழி ஏனைய மொழிகளில் எட்டு விதமான விளக்க உரைகளை இயற்றி வெளியிட்டுள்ள புகழ் காஞ்சி ஸ்ரீஅண்ணங்கராசார்ய சுவாமிகளொருவரையே சாரும்! திருப்பாவை யின் ஒவ்வொரு பாடலுக்கும் ஸ்ரீ எம்பெருமானார் பரமாகவே ஸ்ரீமத் சுவாமிகள் உள்ளுறை வழங்குகையில் பக்தர்களின் ஆச்சரியமும், ஆனந்தமும் அளவிடற் பாலதன்று.

திருப்பாவையை ஒவ்வொரு ஆண்டும் மார்கழித் திங்களில் முப்பதும் தப்பா மல் சில ஆண்டுகளில் இருமுறையும் மொத்தக் கணக்கில் இதுவரை 44 முறை காலட்சேப விரிவுரை ஆற்றியுள்ளார் நம் சுவாமி. அதாவது 44 மாதங்களைத் தொடர்ந்து வைத்துப் பார்த்தால் சுமார் மூன்றே முக்கால் வருடங்கள் காலட்சே பம் நடந்துள்ளது! நாட்களாகத் தொடர்ந்து கணக்கிட்டால் 1320 நாட்கள் திருப்பாவைக் காலட்சேபம் நடைபெற்றுள்ளது. ஒரு காலட்சேபத்திற்கு 2½ மணி நேரமன்றோ குறைந்த அவகாசம் நம் சுவாமிகளுக்கு! அந்த கணக்கில் பார்த் தால் (ஏறக்குறைய 3000 மணி நேரம்) விளக்க வுரைகளை 3300 மணி நேரம் ஒன்றும் கை கரவாது. சார்ங்கமுதைத்த சரமழைபோல் பெய்துள்ளார்! வாழ்க இவர் புகழ்! வளர்க இவர் உரைவளம்!

உரைவளக் காலட்சேபம் முடிந்து, அதில் ஸ்ரீ அண்ணங்கராசார்யரது சொல்வளத்தில் திளைத்து வெளியே வரும் பக்தர்கள் திரளைக் காண்பவர்கள், நம்பிள்ளை கோஷ்டியோ! நம்பெருமாள் கோஷ்டியோ! என்னும் முறையில் நம் அண்ணங்கார் கோஷ்டியோ! என்று வினவினால் அது மிகையாகாது.

ஓரான் வழியாய் உபதேசித்தார்கள் இராமாநுசருக்கு முன்னோரான ஆசாரி யர்கள். பாருலகில் ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள்! கூறுமென்று ஏரார் எதிராசர் தம் இன்னருளால் பேசி அந்த வரம்பை அறுத்ததினால் காலட்சேப கோஷ்டிகள் மூலம் ஸ்ரீவைணவ ஞாலம் பரவலாயிற்று. பகவத் விஷயமாகிற நம்மாழ்வாரின் திருவாய்மொழியை மிக்க நுண்ணறிவுடன் உரைவளம் நிகழ்த்திக் காலட்சேப கோஷ்டிகளைக் கடாட்சித்துப் பெரும் புகழ் கொண்டவர் நம்பிள்ளை.

காலட்சேபக் கலையில் நிகரற்று விளங்கும் ஸ்ரீ அண்ணங்கராசார்ய சுவாமிகள் காலட்சேபக் கலையின் பிதாமகரான நம்பிள்ளைக்குக் கல்லுயர்ந்த நெடுமதிள் சூழ் கச்சியம்பதியிலே திவ்ய சந்நிதியை நிர்மாணித்து நடத்தி வருவது. நம் ஆசார்ய புருஷர்களின் திறனறிந்து நன்றி செலுத்தும் தகைமைக்கு ஓர் உதாரணமாக விளங்குகிறது. நம்பிள்ளைக்கு அடுத்தபடியாக காலட்சேப வைபவம் கண்டருளி மந்தமதிப்புவி மானிடர் தம்மை வாழ்வித்துச் சிறப்புற்றவர் நம் மணவாள மாமுனிகளே காஞ்சிப் பேரருளாளர் சந்நிதி ப்ராகாரத்தில் எழுந்தருளியுள்ள மணவாளமாமுனிகள் திருவோலக்கத்தில் ஸ்ரீ அண்ணங்கராசார்ய சுவாமிகள் திருமஞ்சனக் கட்டியம் சேவிப்பதைக் கேட்போர் மெய் சிலிர்க்கும்! உள்ளம் தேன் ஊறித் தித்திக்கும்!

ஸ்ரீ மணவாளமாமுனிகளின் நூல்களைத் திரட்டி 'வரவரமுநீந்த்ர க்ரந்த மாலை' என்னும் மகுடமிட்ட தொகுதியை ஒரு சேர அச்சிட்டு உதவியுள்ளார்கள் நம் சுவாமி. இந்நூல் மாலையை மேலெழுந்தவாரியாக சேவிப்போரும் இதன் மேன்மையை உணரலாகும்.

இம்மட்டோ? ஸ்ரீ மாமுனிகளின் 600வது ஆண்டுப் பூர்த்தி விழாவையொட்டி இலட்ச ரூபாய் செலவில் சகல ஸ்ரீ வைணவ நூல்களையும் வெளியிடத் திட்டமிட்டு செம்பாதியளவும் நிறைவேற்றியுள்ளார், மேலும் நிறைவேற்றி வருகிறார் நம் ஸ்ரீ அண்ணங்கராசார்ய சுவாமிகள்! வெல்க இவர் தம் முயற்சி! ஓங்குக இவர்தம் செயல் திறம்! ஸ்ரீ மணவாளமாமுனிகளின் திருவாக்கின் நயத்தை ருசித்த பக்தர்கள் அவரை "விசதவாக்சிகாமணி" எனப் போற்றினார்கள்: இவ்வாக்கின் வளத்தை திருவரங்கனும் சேவிக்க விரும்பினான்; அப்போது மாமுனிகள்

"நாமார்! பெரிய திருமண்டபமார்! நம்பெருமான்<br>
தாமாக எம்மைத் தனித்தழைத்து — நீ மாறன்<br>
செந்தமிழ் வேதத்தின் செம்பொருளை நாடோறும்<br>
வந்து உரையாய்! என்று ஏவுவதே வாய்ந்து" என வியந்து திருவாய்மொழியாகிற பகவத் விஷயத்திற்கான ஈடு முப்பத்தாறுயிரப்படி வியாக்கியானத்தை ஓராண்டுகாலம் சேவிக்கவும், அழகிய மணவாளனும் மாமுனிகள் விஷயமாகப் போற்றிப் பாடலான ஸ்ரீ சைலேசத் தனியன் வழங்கினான். ஸ்ரீ மணவாள மாமுனிகளின் வாக்கின் வளத்தைச் சேவித்த ஸ்ரீ வைணவ உலகம் மாமுனிகளை "முப்பத்தாறுயிரப் பெருக்கர்" என்றும்; "ஈட்டுப் பெருக்கர்" என்றும் போற்றி வணங்குகிறது.

ஸ்ரீ ராமாநுசரது திருவுள்ளத்திற்கும். ஸ்ரீ நம்பிள்ளையின் திருவுள்ளத்திற்கும், மணவாளமாமுனிகளின் திருவுள்ளத்திற்கும் உகப்பாக காஞ்சி ஸ்ரீ அண்ணங்கராசார்ய சுவாமிகள் ஆற்றிவரும் பெரும் தொண்டுக்கு ஸ்ரீ வைணவ உலகம் என்ன கைம்மாறு செய்யக்கூடும்! உடையவருடைய சிறப்புத் திருநாமமான திருப்பாவைஜீயர் என்னும் மகுடத்தில் திருப்பாவை என்ற சொல்லையும், நம்பூர் வரதராஜாசாரியரின் சிறப்புத் திருநாமமான நம்பிள்ளை என்ற திருப்பெயரில் நம் என்ற சொல்லையும். ஸ்ரீ மணவாளமாமுனிகளின் சிறப்புத் திருநாமமான

2

ஈட்டுப் பெருக்கர் என்ற மகுடத்தில் பெருக்கர் என்ற சொல்லையும் அமைத்து ஸ்ரீ அண்ணங்கராசார்ய சுவாமிகளை "நம் திருப்பாவைப் பெருக்கர்" என்றே கொண்டாடுதல் சாலவும் பொருத்தமாகும்,

ஸ்ரீ அண்ணங்கராசார்யரின் சீரிய காலட்சேபச்சுவையினை எவ்விடத்தும், எக்காலத்தும் நுகரலாம்படி நாம் செய்யவேண்டியதோடு தொண்டினைக் கண்டும் விண்ணப்பிக்க விரும்புகிறேன்.

இவரது காலட்சேப பாணி வெகு அருமையானது,- மிகமேம்பட்டது, பக்தி நெறிக்கும், தமிழ் மொழிக்கும். பிரசார விரிவுரை வள உக்திக்கும் மிக மிகப் பயன் படுவது. இவரது காலக்ஷேபங்களை ஒலிப் பட்டோலை (Taperecord) செய்து வானொலி மூலமாகவும், பிற விழாக்கள், சபைகள் மூலமாகவும் பரவச் செய்தல் வேண்டும். இந்த 'சாதாரண' மார்கழியில் சென்னையில் சத்காலட்சேப சபையின் ஆதரவில் நடைபெற்ற விரிவுரைகளை சில தினங்கள் நீங்கலாக ஒலிப்பட்டோலை செய்யப் பட்டது பாராட்டத்தக்கதாகும். அடுத்த ஆண்டுகளில் முப்பது நாட்களும் தப்பாமல் ஒலிப்பட்டோலை செய்து வைப்பது ஸ்ரீ வைஷ்ணவ உலகுக்கு ஓர் நிதியாக அமையும். அமையவேண்டும்!

இவ்வாண்டில் வானொலியார் நம்மாழ்வார், இராமாநுசர், மணவாள மாமுனிகள், திருமங்கை மன்னன் என்ற தலைப்புகளில் இலக்கிய உபன்யாசங்களாக நம் சுவாமிகளது விரிவுரைகளை அஞ்சல் (Relay) செய்துள்ளனர். இஃதேபோல் இவர்தம் விரிவுரை வளத்தையெல்லாம் ஒலிப்பட்டோலை செய்து அஞ்சல் செய்வது இலக்கியத்திற்கும், ஸ்ரீ ராமாநுஜ தரிசனத்திற்கும் செய்யும் அரிய சேவையாகும்.

சமீப காலத்தில் தொலைக்காட்சி (Tele-vision) வசதியும் சென்னை மற்றும் தமிழ் நாட்டில் முக்கிய பகுதிக்கு ஏற்படலாம். அங்ஙனமாயின் தொலைக்காட்சி மூலம் ஸ்ரீ அண்ணங்கராசார்ய சுவாமிகளின் காலட்சேப வைபவத்தைப் பொறித்து வைப்பது மிகவும் அவசியமாகும். இவரது ஸ்ரீ வைஷ்ணவப் பொலிவும் திரண்டு கூடும் தூராத மனக் காதல் தொண்டர்தங்கள் கூட்டமும் கண்கொள்ளாக் காட்சியாகும். இடையில் ஒரு நாளில் நம் ஸ்வாமி அருளும் அரையர் சேவை கண்ணுக்கும் காதுக்கும் சிறந்த விருந்தாகும். கண்டோம்! கண்டோம்! கண்ணுக்கினியன கண்டோம்! எனக் கண்ணால் கண்டு களிப்பதுடன், செவிக்கினிய செஞ்சொற்களால் பாற்கடலுள் பையத்துயின்ற பரமன் அடி பாடுதலையும் செவியாரக் கேட்டு மகிழ்ந்தோம்.

அடியார்கள் வாழ! அரங்கநகர் வாழ!
சடகோபன் தண்தமிழ் நூல் வாழ! கடல்
சூழ்ந்த மண்ணுலகம் வாழ! மணவாள
மாமுனியும் வாழ! அண்ணங்காரியரே!
இன்னுமொரு நூற்றாண்டிரும்!

என இவரைப் போற்றி மகிழ்வோமாக. இப்படிக்கு நா. வேணுகோபாலன் B.A. B L.,

## ஷண்மதஸ்தாபன விமர்சம்.

(ஸ்ரீ தேவராஜன், 68, ராமஸ்வாமி தெரு, மண்ணடி, சென்னை).

சமீபத்தில் முத்தியால்பேட்டை கிருஷ்ணன் கோயிலில் நடந்த ஸ்ரீமத் பாகவத காலட்சேபத்தில் உபந்யஸித்த ப்ரம்மஸ்ரீ வேங்கடேச சாஸ்திரி என்பார் ஒருநாள் உபந்யாஸத்தில் ஷண்மதங்களைப் பற்றித் தெரிவித்து இவற்றை ஸ்தாபித்து. அவ்வழிபாடுகளைப் பரவச்செய்தவர் ஆதி சங்கரர் என்றும்; திருமால், சிவன், பிரமன் மூவர்க்கும் மேம்பட ஓர் சக்தி உள்ளதென்றும்; அதற்கு உருவம். அருவம் இரண்டும் பக்தர்களின் மனப்போக்கு என்றும் பேசினார். இந்தப்பேட்டையில் ஸ்ரீவைணவ ஸம்பிரதாய தத்துவ ஞானம் பெறாத ஸ்ரீவைஷ்ணவர்கள் -பலருள்ளதால் சாஸ்திரிகள் கூறியதை மறுத்து எம்பெருமானார் தரிசனத்தின் உண்மையையும் ஏற்றத்தையும் அவருக்கு யாரும் உணர்த்தினதாகத் தெரியவில்லை. அடியேன் அடியோடு அவர் காலட்சேபத்திற்குச் செல்லவில்லை. சாஸ்திரிகள் ஸ்ரீ காஞ்சீபுரம் ஸ்வாமியைப் பற்றி மிகவும் கொண்டாடி ஒரு நாள் ப்ரஸ்தாபித்ததாகக் கேள்வியுற்றேன். ஸகலசாஸ்த்ரார்த்தங்களிலும் உள்புகுந்து உண்மையான தத்துவத்தை பண்டிதரும், பாமரரும் அறிந்து போற்றலாம்படி அந்த P. B. A. ஸ்வாமிகளின் உபந்யாஸங்களும், நூல்களும் அமைந்துள்ளதை நோக்குகையில் அந்தஸ்வாமிகளைப் போன்று பிற்காலத்தில் அஸாதாரண மேதையுடன் ஒருவர் தோன்றுவரா? என்ற கேள்விக்கு விடையிறுப்பது சந்தேகமென்று அவர் கூறினாராம். எல்லாம் பேசினும் எது கொண்டு எதைப் பேசவேண்டும் என்பதை பலர் அறிந்தும் அறியாமல் பிரவசனம் செய்து போருகிறார்கள்.

இந்த சாஸ்திரிகள் தாம் திருப்பாவையை மனனம் செய்து அதை உபந்யஸிக்க ஆசைப்பட்டாராம். அதற்காக P. B. A. ஸ்வாமி எழுதியுள்ள "திருப்பாவை ஆழ்பொருள் விளக்கு" என்னும் நூலைச் சுவைத்து, தாமும் ஒரு மணிகாலமாவது உபந்யாஸம் செய்யலாம் என்ற முடிவுக்கு வந்தாராம். பிறகு ஒரு ஸம்வத்ஸரம் P. B. A, ஸ்வாமியினுடைய மார்கழி யுபந்யாஸத்தில் வந்து கங்காப்ரவாஹம் போன்று அந்யாபதேச, ஸ்வாபதேசார்த்தங்களை வெளியிடுவதுகண்டு திருப்பாவையை தாம் சரியாக மதிப்பிடவில்லை என்ற முடிவு கண்டாராம். திருப்பாவை யுபந்யாஸத்தில் ஆவல் கொண்ட இப்பெரியார் திருமால் பரத்துவத்தை அறிந்தும் மேலான ஓர் சக்தி உண்டென்று கூறியதோடல்லாமல் "துருவ சரித்திரம்" உபந்யஸித்த தினத்தில் துருவனுடைய கடுந் தவத்திற்கு இரங்கி பரம்பொருள் மஹாவிஷ்ணுதிருக்கோலத்தில் வந்தார் என்று கூறினராம். மஹாவிஷ்ணுவுக்கும் மேலான பரம்பொருள் எதுவென்று அவர் அறிவரோ? அறியாரோ? ஈதென்ன மயக்கம்! இவர்கள் மயக்கம் ஒருநாள் தீரும் என்றே நினைக்கிறபடி. ஸ்ரீராமாநுஜன் 269ல் ஸ்ரீமான் உ. வே. புத்தூர் அட்வகேட் ஸ்வாமிகளின் ஷண்மதஸ்தாபன சர்ச்சை யென்னும் நூல் பிரஸ்தாபித்துப் புகழப்பட்டுள்ளது. அது நம் சாஸ்திரிகள் போல்வார்க்குக் கிடைத்தால் மிகவும் பயன்படுமென்று விஜ்ஞாபித்து நிற்கிறேன். தாஸன், தேவராஜன்.

---

## ப்ரஹ்மஸ்ரீ. R. ராமசந்திரனவர்கள்

130, Brodies Road, Mylapore, Madras-4.

மயிலையில் வாழும் இப்பெரியாரை யறியாத ஆஸ்திகர் உலகிலிருக்கமாட்டார்கள். இவருடைய பரிசயம் எனக்கு நெடுநாளாகவுண்டு. வைதிக வித்யைகளில் ஆழ்ந்த அறிவுடையவர், மஹா நிபுணர்; எதிலும் ஆக்ரஹமற்ற தடஸ்த சீலர் என்பதை, இவர் நமக்கு அடிக்கடி யெழுதும் ப்ரேமகனமான பத்ரிகைகளினுல் அறிகிரேம். நம்முடைய ஸகல க்ரந்தங்களும் இப்பெரியார்க்கு வாசோவிதேய மென்னலாம். ஒவ்வொருமாதமும் ஸ்ரீராமாநுஜன் கிடைத்தவுடனே அதைப் பூர்த்தியாக வாசித்துமுடித்து, அதில் தமக்குண்டான ரஸாநுபவங்களைத் தெரிவித்துக்கொள்ளாமலிருக்க மாட்டார்.

நேற்றைய 269 லக்கமுள்ள ஸ்ரீராமாநுஜன் தமக்குக் கிடைத்தவுடனே இப்பெரியார் எழுதிய பத்ரிகையை நாம் மிகுந்த ஆனந்தத்துடனும் அபிநிவேசத்துடனும் இங்கே வெளியிடுகிரேம்.

"ராமசந்திரன் அனந்தகோடி நமஸ்காரம். ஸ்ரீ ராமாநுஜன் 269 இப்போது தான் 20—1—71 (3 P. M.) கிடைத்தது. அதில் ஸ்ரீரங்கநாத பாதுகைக்கு விடையளிப்பு என்ற வியாஸத்தை ஸ்தூலமாக வாசித்துவிட்டு "வேத ஸ்வரங்களில் சில ஆராய்ச்சிகள்" என்ற விஷயத்தை வாசிக்கும்போது (Page 17) "வேதத்தில் லக்ஷக்கணக்காகவுள்ள பதங்களின் ஸ்வரப்ரக்ரியையை ஆராய்ச்சிசெய்து உண்மை கண்டுபிடித்தவன் ஜம்பூத்வீபத்தில் அடியேன் ஒருவன் தவிர வேறொருவரு மில்லையென்று துணிந்து சொல்வேன்" என்கிற வாக்யத்தை யாராவது ஆத்ம ப்ரசம்ஸையென்று நினைப்பர்களோ என்கிற சங்கை தேவரீருக்கு அங்குரிக்க வேண்டியதேயில்லை "இதம் ஸத்யம் இதம் ஸத்யம் இதி உத்த்ருத்ய புஜமுச்யதே" என்று தெரிவிப்பதற்காகவே இக்கடிதம் எழுதலானேன். தேவரீருக்கு ஸர்டிபிகேட் கொடுக்க நான் எந்த விதத்திலும் அர்ஹதையுடையவனல்லேனுயினும் இந்த வேத ஸ்வரங்களைப் பற்றிமட்டும் அடியேன் யத்கிஞ்சித் சர்ச்சை செய்திருக்கிறேன். நான் பார்த்த எந்த புஸ்தகத்திலும் தேவரீருடைய விமர்சத்தின் ஏகதேசமும் காணப்படவில்லை. இந்த விஷயம் எதிலும் பரிசீலிக்கப்படவேயில்லை யென்கிற தைரியத்தினுல்தான் அடியேன் தேவரீர் செய்துள்ள ஸ்வர விமர்சத்தை அபிநந்தனம் செய்ய முன்வந்தேன். சில வருஷங்களுக்குமுன் தேவரீர் வெளியிட்டிருக்கிற பதபாடபரித்ராணத்தை ஸத்பாத்ரங்களுக்குக் காட்டிவருகிறேன். காணும் யாவரும் உகக்கிருர்கள். தேவரீருடைய வியாஸத்தின் முடிவில் "வேதவாஸனையே அறியாதார் ஏசுவதனுல் காஹாநி:?" என்று கண்டேன். ஹாநியில்லை யென்பது விஷயமன்று. என்போல்வார்க்கு மிகுத்த லாபமன்ரோ வுள்ளது. அத்புதமான ஆராய்ச்சிகள் வெளிவருவதற்கு ஹேதுவானதனுல் வைதிகவுலகுக்கே மிகுந்த லாபமன்ரே.

*ராமசந்திரன்*, 21—1—71. மயிலை.

## ஸ்ரீமதுபயவே. திருவெவ்வுளூர்

## அர்ச்சக நரஸிம்ஹாசார்ய ஸ்வாமியின் கடிதம்.

திருவுள்ளூர் ஸ்ரீ வீரராகவ ஸ்வாமி தேவஸ்தானத்தில் கைங்கர்யபரர் களாக விளங்கும் ஸ்வாமிகள் பெரும்பாலும் புகழத்தக்க யோக்யதைகள் படைத்த வர்களென்பதை அக்ருத்ரிமமான ஹ்ருதயத்துடன் விஜ்ஞாபிக்கிறேன். கீர்த்தி மூர்த்தியான ஸ்ரீமத் பரமஹம்ஸ இஞ்சிமேட்டழகியசிங்கர் ஸ்வாமியின் பூர்வாச்ரம தௌஹித்ரரான ஸ்ரீமதுபயவே. புரிசை கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி சிறந்த சாஸ்த்ரஜ்ஞராய் பரமஸத்வநிதியாய் இங்கு நிர்வாஹக பதவியில் விளங்கி வருவது இத்தலத்திற்குச் சிறந்த அணியாகும். மற்றும் திருவாராதனம் முதலிய கைங்கரியங்களில் அந்வயித்திருப்பவர்களும் திவ்ய ப்ரபந்தாதிகாரிகளாகவோ ஸாங்க வேதாத்யாயிகளாகவோ விளங்கி வருவதை அடியேன் அநுபவித்து விஜ்ஞாபிக்கிறேன். முத்ரகர்த்ருபதவியில் அமர்ந்திருக்கின்ற ஸ்ரீ ம து ப ய வே பழவேரி க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியும், திருவாராதன கைங்கரியத்தில் அமர்ந் திருக்கின்ற கனபாடி நரஸிம்ஹாசார்ய ஸ்வாமியும் விசேஷித்துக் குறிப்பிடத்தக்க வர்கள். ப்ரக்ருதம் நரஸிம்ஹாசாரியருடைய ப்ரேமபரீவாஹ பத்ரிகை யொன்று கிடைத்ததனால் ஸம்ஸ்க்ருத பாஷையிலுள்ள அப்பத்ரிகையின் ஸாராம்சத்தை யீண்டு அறிவிக்க ஆவல் கொள்ளுகிறேன். நேரான மொழி பெயர்ப்பு;—

'269 லக்கமுள்ள ஸ்ரீராமாநுஜன் வரப்பெற்றேன். ஒவ்வொரு விஷயமும் விஸ்மயத்தையும் ப்ரஹர்ஷத்தையும் விளைவிக்கின்றது. வேதஸ்வர விஷய மான விமர்சங்கள் அடியேனைப் பரவசமாக்கி விட்டன. இவை அபூர்வ மானவை யென்பதில் என்ன ஸந்தேஹமுள்ளது. இப்படிப்பட்ட அருமை வாய்ந்த விஷயங்களை மேன்மேலும் ஸ்ரீராமாநுஜன் மூலமாகவே வெளியிட்டு வைதிக வித்வான்களை ஆனந்தக் கடலில் அமிழ்த்தவேணுமென்று பிரார்த் தித்து நிற்கிறேன். இப்படிக்கு. *நரஸிம்ஹ தாஸன்,*

திருவெவ்வுளூர், 28—1—71.

இதை யொட்டி அடியேன் செய்யும் விண்ணப்பம். இங்ஙனே மற்றும் சில வைதிக வித்வான்களும் உகந்து ஸ்ரீமுகங்கள் அருள் செய்திருப்பதனால் வேதஸ்வர விமர்சபரமாக நீண்டதொரு க்ரந்தம் எழுதிவெளியிடவேணுமென்று அறுதி யிட்டு வடமொழியில் ஸ்வரபேதஸித்தாஞ்ஜநம் என்னும் ஒரு நூலை எழுதத் தொடங்கினேன்; அது அடியேனுடைய வைதிகமநோஹரா மூலமாக அடுத்த பங்குனி விசாகத்தின் நினைவுமலராக வெளிவரும். குறித்த காலத்தில் சில பகுதி கலாவது வெளிவரும் அதிலிருந்து மிக முக்கியமான சில விஷயங்களை இவ் விதழிலேயே மேலே வெளியிடுகிறேன். வேதமோதாதவர்களும் வாசித்துப் பயன் பெறலாம். பத்ராதிபர்.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம்

## அண்ணங்கராசார்யர் ஸ்வாமியின்

## ஸாதாரண வருஷத்திய

# மீன விசாகோத்ஸவப் பத்திரிகை.

## சதாபிஷேகம்

ஸ்ரீ ஸ்வாமியின் எண்பதாவது திருநக்ஷத்திரபூர்த்தியை முன்னிட்டு
ஸ்ரீ காஞ்சியில் ஸ்வாமியின் திருமாளிகையில்
நாளது பங்குனி மீ 21உ (4—4—71) ஞாயிற்றுக்கிழமை முதல்
பங்குனி மீ 30உ (13—4—71) செவ்வாய்க்கிழமை வரை
வேதபாராயணம், திவ்யப்ரபந்தஸேவை,
ரஹஸ்யாநுஸந்தானம், ஸ்தோத்ரபாடம்
வித்வான்களின் உபந்யாஸம் இவை நடைபெறும்.
ஆப்தர்கள் அனைவரும் கூடியிருந்து சிறப்பாக
நடப்பிக்கும்படி பிரார்த்திக்கப்படுகிறார்கள்.

வேதபாராயண கோஷ்டிகள் கடந்த இருபது
ஸம்வத்ஸரங்களிற் போலவே ஸாமவேதம், சுக்லக்ருஷ்ண
யஜுர்வேதம் க்ரமாந்தம் திருவீதி வலத்துடன் நடைபெறும்.

இங்ஙனம்,

காஞ்சீபுரம்,
10—2—71.

பிரதிவாதி பயங்கரம் செல்வமணி என்கிற
ரங்கநாத தாஸன்.

## ஓர் விசித்திமான வினு.

சென்ற மார்கழி மாதத்தில் ஒரு பெரியவர் முப்பது நாளும் நம்முடைய திருப்பாவை ப்ரவசனத்திற்கு வந்து கொண்டிருந்தார். அவர் இன்ன ஸம்பிர தாயத்தைச் சேர்ந்தவரென்று கண்டுபிடிக்க முடியாத நிலைமையிலிருந்தார். பெயரைக் கேட்டபோது சர்மா என்று பெயரென்ருர். வைஷ்ணவரா சைவரா என்றுமறிந்துகொள்ளமுடியவில்லை. வைணவ நூல்களிலிருந்தும் கேள்வி கேட் கிருர்; சைவ நூல்களிலிருந்தும் கேள்வி கேட்கிருர் அவர்க்குக் கல்வியறிவு குறை வென்றும், கேள்வியறிவு அதிக மென்றும் ஊஹிக்கலாயிற்று. நம்முடைய திவ்ய ப்ரபந்த திவ்யார்த்ததீபிகையைப் பெரும்பாலும் படித்திருப்பதாகச் சொல்லி அதில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கேள்வி கேட்டுக் கொண்டிருந்தார். கேள்விகளெல்லாம் மூலத்திலேயே யொழிய உரையிலல்ல. நம்மாழ்வாரருளிய திருவிருத்தத்திலிருந்து அதிகமான கேள்விகள் கேட்டு வந்தார். ஒரு நாள் கேட்டதாவது' அதில் தொண்ணூற்ருரும் பாட்டில் "வணங்குந் துறைகள் பலபல வாக்கி, மதிவிகற்பால் பிணங்குஞ் சமயம் பலபல வாக்கி, அவையவைதோறு அணங்கும் பலபல வாக்கி" என்றிருப்பதை யெடுத்துக் கொண்டு

"பலபல மதங்களையும் பலபல தெய்வங்களையும் ஸ்ரீமந் நாராயணனே ஆக்கி வைத்தானென்று இதில் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்க, ஒரு மதத்தை ஆதரித்து வேறு மதங்களை இகழ்வதும், ஒரு தெய்வத்தை யாதரித்துப் பிற தெய்வங்களை அநாதரிப்பதும் கூடுமோ? ஒரு பிதாவானவர் பல மக்களை யுண்டாக்கினுல் அந்த மக்கள் எல்லாரும் ஸஹோதரவாஞ்சையோடு தானேயிருக்கவேண்டும்; பரஸ்பரம் இகழ்வது கூடாதல்லவா? ஆக்கி ஆக்கி ஆக்கி என்று எல்லாவற்றையும் உண்டாக்கினவன் ஸ்ரீமந் நாரா யணனே யென்று ஆழ்வார் அருளிச் செய்திருப்பதை நீங்கள் மனமார மதிப்பவர்களாயிருந்தால் எதிலும் வெறுப்பு கூடாதல்லவா? விருப்பு வெறுப்புகள் ஆழ்வாரை வழி படுமவர்களுக்கு எப்படி யுக்தமாகும்; மற்றவர் களைப்பற்றி நான் கேட்கவில்லை; கேட்க நியாயமுமில்லை. ஆழ்வார் பாசுரங் களை விரும்பி ஓதுமவர்கள் இதற்கு விடை கூறித்தானே யாகவேண்டும்"

என்ருர். இதற்கு நாம் பலவாறு விடை கூறினேம். முடிவாக நாம் கூறின தென்னவென்ருல்; மதுர பதார்த்தத்தைப் படைத்த பகவான் தான் வேம்பு விஷம் முதலியவற்றையும் படைத்தான்; ஆனுல் நீர் மதுர பதார்த்தங்களை உகந்தும், வேம்பு விஷங்களை வெறுத்தும் வருகிறீர்; இரண்டும் பகவானுலே படைக்கப் பட்டிருக்க ஒரு வஸ்துவில் விருப்பும் மற்ருெரு வஸ்துவில் வெறுப்பு முண்டாகக் காரணம் என்னவென்று ஆராய்ந்தீரா? என்று கேட்டேன். ஆலோசித்துச் சொல்லுகிறே னென்ருர்.

அதன் பிறகு தத்வத்ரயத்தில் சித்ப்ரகரணத்தின் (முடிவில்) "73. ஆனந்த ரூபமாகையாவது—ஜ்ஞானம் ப்ரகாசிக்கும்போது அநுகூலமாயிருக்கை. 74.

விஷசஸ்த்ராதிகளைக் காட்டும்போது ப்ரதிகூலமாயிருக்கைக்கு அடி தேஹாத்ம ப்ரமாதிகள். 75. ஈச்வராத்மகமாகையாலே எல்லா பதார்த்தங்களுக்கும் ஆநுகூல்யமே ஸ்வபாவம், ப்ராதிகூல்யம் வந்தேறி." என்கிற சூர்ணைகளை யெடுத்துச் சொல்லி மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீ ஸூக்திகளையும் ஸேவித்துக் காட்டினேன். அவர் கேட்டுத் தெளிவுபெற்றதாகச் சொன்னார்.

மேல் நடந்த சர்ச்சைகளை மற்றொரு கால் விளக்குவோம். இவ்விஷயத்தில் சில பெரியார்களின் கட்டுரைகளை ஸ்ரீராமாநுஜன் ஆவலோடு எதிர்பார்க்கிறபடி.

## திருப்பாவை சாத்துமுறையில் விருதளிப்பு

திருவரங்கம் பெரியகோயிலில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மதுபயவே. திருமலை அனந்தாண்பிள்ளை சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி நேற்று மார்கழி முப்பதும் திருச்சிக்கடுத்த புத்தூரில் திருப்பாவையுபந்யாஸம் ஸாதித்து வந்தார். 15—1—71 ல் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகளின் தலைமையில் ப்ரவசன சாத்துமுறை நடைபெற்ற போது ப்ரவசன கர்த்தாவுக்கு ஸாரார்த்தச் சொல்லழகர் என்கிற விருதை அநுபவ ரஸிகர்களான புத்தூரக்ரஹாரவாஸிகள் சூட்டினார்கள். அதுவுமன்றி "திருப்பாவையை நூறுமுறை இப்படியே தேவரீர் பல விடங்களில் வர்ஷித்து அதற்கு சதாபிஷேகம் கொண்டாட வேண்டும்" என்றும் ஆசாஸித்தார்கள்—என்றறிந்து இந்த ஆசாஸனத்தில் நாமும் கலந்து கொள்ளுகிறோம். ... ... *

## அறுநூறு விருந்துகளின் அநுவ்ருத்தி

ஸ்ரீராமாநுஜன் 260, 261 ல் அரிய பெரிய அறுநூறு விருந்துகள் என்னும் கட்டுரை தொடங்கப் பெற்றிருப்பது நண்பர்கட்கு நினைவிலிருக்கும். மணவாள மாமுனிகளின் அறுநூறாண்டு நிறைவு நினைவு மலர்களுள் அஃது ஒன்று. நடந்த ஆவணி புரட்டாசி மாதங்களின் ஸஞ்சிகை அது. அதில் 96 பக்கங்கள் முடிவுபெற்று இருநூறு விருந்துகள் முடிந்தன. அதன் பிறகு வெவ்வேறு விஷயங்கள் வெளியிட நேர்ந்ததனால் அது தொடர்ந்து வெளிவராமல் நின்றிருக்கின்றது. இருநூற்றோராவது விருந்திலிருந்து [மூன்றாவது நூறு] இவ்விதழில் தொடங்கப் பெறுகின்றது. வேத ஸ்வர விஷயமான விமர்சங்களையும் இந்த விருந்துகளிலே சேர்த்து வெளியிடுகின்றோம். இது வேத மோதினவர்களுக்குத் தவிர மற்றையோர்களுக்குப் பயன்படுமதன்றேயென்று தள்ளிவிடாமல் விவேகிகளாயுள்ளவர்கள் அனைவரும் வாசித்துப் பயன்பெறுவார்களாக. .... *

இவ்விதழில் பக்கம் 3-ல் வெளியிடப்பட்டுள்ள ஸ்ரீராஜமன்னுர்ஸன்னிதி
மஹோத்ஸவகோஷ்டியின் காட்சி



மணவாளமாமுனிவன் பொன்னடியாஞ் செங்கமலப் போதுகளைப் போற்றும்
பெரியோர்களின் இன்பமிகு பெருங்குழுவு.

அந்தமில்சீர் மணவாள முனிப்பரன் அவதாரம் செய்தருளிய ஸாதாரணவாண்டு
ஐப்பசித் திருமூல நன்னுள்.



ஸ்ரீவானமாமலை மடம்
26-வது பட்டத்திலெழுந்தருளியிருந்த
ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி
ஸ்ரீமதுரகவிஸ்வாமி (வைகுண்டவாஸி)



ஸ்ரீவானமாமலை மடம்
27-வது பட்டத்தை இப்போது
அலங்கரித்தருளாநின்ற
ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி
சின்ன ராமாநுஜஜீயர்ஸ்வாமி



இவ்வாண்டு கார்த்திகைமாத முடிவில் ஸ்ரீமதுபயவே. (Advocate) K. S. சம்பகேச ஐயங்கார் (திருவல்லிக்கேணி) ஸ்வாமியின் தேவிகள் ஆசார்யன் திருவடி சேர்ந்ததை முன்னிட்டு அவர் திருமாளிகையில் நடத்திய திருவத்யயன கோஷ்டி.



ஸ்ரீமான உவே. V. C. பத்மநாபன்.
கீர்த்திமூர்த்தியான (ஹைகோர்ட் ஜட்ஜ்)
வளவரம் பாஷ்யமையங்கார்ஸ்வாமியின்
இளைய குமாரர்



ஸ்ரீமதுபயவே. ஸ்ரீவில்லிபுத்தூர் விஞ்சிமூர் தாதாசார்யஸ்வாமி
(நேற்று மார்கழியில், பெங்களூர் ராமமந்திரத்தில்
திருப்பாவை யுபந்யாஸ ஸந்தர்ப்பம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நமः

ஸ்ரீமத் வரவரமுநயே நமः

ஸ்ரீ காஞ்சீ. அண்ணங்கராசாரியர் எழுதிவரும்

# அரியபெரிய அறுநூறு விருந்தில்

## மூன்றுவது நூறு

### — பெரியாழ்வார் எதனுல் பெரியாழ்வார் ? —

201. ஆழ்வார்களில் ஒருவரைப் பெரியாழ்வாரென்கிறோம்; அவருடைய நிஜமான திருநாமம் விஷ்ணுசித்தரென்றும் பட்டநாதரென்றும் சொல்லப்படுகிறது; பெரியாழ்வாரென்கிற திருநாமம் எதனுல் அவர்க்கு ஆயிற்று? ஆழ்வார்களுள் அவர் மூத்தவருமல்லர்; நம்மாழ்வார் திருமங்கையாழ்வாரைப் போலே ஆயிரக் கணக்கான பாசுரங்களைப் பாடினவருமல்லர், *பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசையையன் அருள்மாறன் சேரலர்கோன் துய்யபட்டநாதனென்று ஆழ் வார்களின் திருவவதாரக்ரமத்தில் இவ்வாழ்வார் ஏழாமவர்; ஆகவே பிராயத்தினுல் பெரியவரல்லர்; இவர் அருளிச்செய்த பாசுரங்கள் நானூற்றுச் சொச்சம் பாசுரங் களே யாதலால் ஆயிரக்கணக்கான பாசுரங்கள் பாடினவருமல்லர்; அப்படியிருக்க, எதனுல் இவரைப் பெரியாழ்வாரென்கிறது? என்னில்; இதற்கு உரிய ஸமாதானம் உபதேசரத்தினமாலையில் "மங்களாசாசனத்தில் மற்றுள்ளவாழ்வார்கள், தங்கள் ஆர்வத்தளவு தானன்றிப்—பொங்கும் பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றுன், பெரியாழ்வா ரென்னும் பெயர்" என்கிற பாசுரத்தில் வெளிவந்துள்ளது. எம்பெருமானைக் கண்டவாறே அவனிடத்துத் தமக்கொரு நன்மையைக் கோலாமல் அவன் அபாயமொன்றுமின்றி வாழ்ந்திருப்பதையே தமக்குப் பெருத்த நன்மையாகக் கொண்டு பல்லாண்டு பாடினபெருமை இவர்க்குமட்டுமே அஸாதாரணமாக இவருடைய சரிதையில் காண்பதனுல் இதையிட்டு இவர் பெரியாழ்வாரெனப்பட் டார். பெரியாழ்வாரென்கிற திருநாமத்திற்கு கீழே விவரித்த நிர்வாஹம் தவிர வேறொரு நிர்வாஹமுமுண்டு. வேதாந்த வாசிரியர் கோதாஸ்துதியில் *தாதஸ் து தே மதுபித: * என்கிற சுலோகத்தில் ஆண்டாள் சூடிக்களைந்த மாலையை நித்யமும் எம்பெருமானுக்கு உபஹரித்து வந்ததனுல் பெரியாழ்வார் என்கிற திருநாமம் பெற்றுர் என்று கூறியுள்ளார்; "த்வந்மௌலிகந்த ஸுபகாம் உபஹ்ருத்ய மாலாம் லேபே மஹத்தர பதாநுகுணம் ப்ரஸாதம்" என்பது அந்த ஸ்ரீஸூக்தி- இதில் மஹத்தரபதமென்றது பெரியாழ்வா ரென்பதை நோக்கியே. இப்படியும் ஒரு நிர்வாஹமுண்டென்று கொள்வதில் குறையொன்றுமில்லை. ... ... •

### — பெரிய வுடையாரின் பெருமை —

202. ஸ்ரீராமாயணத்தில் பேசப்படுகிற ஜடாயு மஹாராஜரை நம் ஆசாரி யர்கள் பெரிய வுடையார் என வழங்கி வருகின்றுர்கள்; ஸ்ரீவசனபூஷணத்தில்

"பெரியவுடையாரும் பிள்ளை திருநறையூரரையரும் உடம்பையுபேக்ஷித்தார்கள்" என்னும் சூர்ணையில் பெரியவுடையாரெனப்படுபவர் ஜடாயுமஹாராஜர் தானே; எதனால் அவர்க்குப் பெரியவுடையாரென்று திருநாமமாயிற்று? என்னில்; அவர்க்கும் இதுவே காரணந்தான். ஸ்ரீராமாயணத்தில் சக்ரவர்த்தி திருமகனுக்கு மங்களாசாஸனம் செய்தவர்கள் பல பலருளரெனினும் இந்த ஜடாயு மஹாராஜருடைய மங்களாசாஸனந்தான் தலைசிறந்ததாயிற்று. அதாவது—பெருமாள் பிராட்டியைப் பிரிந்து தேடத்தகாத விடங்களிலும் தேடிக்கொண்டு வருவதைக்கண்ட ஜடாயு தாம் முமூர்ஷுவாயிருக்கச் செய்தேயும் தம்முடைய ரக்ஷையில் கண்ணோட்டமின்றிக்கே "யாம் ஓஷதிமிவ ஆயுஷ்மன்! அந்வேஷஸி மஹாவநே" என்று பெருமாளை ஆயுஷ்மந்! என்று விளித்ததுண்டே இது மிகச்சிறந்த மங்களாசாஸனம். நீர் தீர்க்கமான ஆயுள்பெற்று வாழவேணுமென்பதே அந்த விளியின் கருத்து, அந்த ஸமயத்தில் இங்ஙனேயிவர் மங்களாசாஸனம் செய்யவேதான் இராமபிரான் உயிர் தரிக்கப் பெற்றாரென்பது நம் ஆசாரியர்களின் நிர்வாஹம். இதையிட்டே அவரைப் பெரியவுடையாரென்றது. ... ... .... ... ❀

## — யதோக்தகாரியெம்பெருமான் —

203. திருவெஃகாவிலெம்பெருமான் வடமொழியில் யதோக்தகாரீ என்றும், தென்மொழியில் சொன்னவண்ணஞ் செய்த பெருமாளென்றும் திருநாமம் பெற்றிருக்கிறாரன்றோ? யார் சொன்னபடி செய்தவர்? என்று கேள்விவரின், ஸரஸ்வதியால் நேர்ந்த வேள்வித்தடையைப் போக்கித் தர வேணுமென்று பிரமன் பிரார்த்தித்தபடியே செய்தவர் என்றும், "பைந்நாகப்பாய் சுருட்டிக்கொள்" "விரித்துக்கொள்" என்று திருமழிசைப்பிரான் சொன்னபடியே செய்தவர் என்றும் இருவகையாகவும் நிர்வஹிப்பதுண்டு. பிந்தின நிர்வாஹமே முக்கியமானது. ... ... ❀

## — திருமழிசைப்பிரானைதிஹ்யத்தைப்பற்றி —

204. ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமான் தையில் மகத்தன்று கண்டருளும் பைந்நாகம்பாய்சுருட்டி யுத்ஸவத்தைப்பற்றிச் சிலர் ஸந்தேஹம் கொள்வதுண்டு. அசல மூர்த்தியான அர்ச்சாவதாரப் பெருமாள் திருமழிசைப் பிரானைப் பின்சென்று தானும் எழுந்துபோனாரென்றும், அவர் மீண்டவாறே தானும் மீண்டாரென்றும் கதை சொல்லுவதும், அதை ஒரு உத்ஸவமாக நடத்திக்காட்டுவதும் பரிஹாஸ்யமென்று சிலர் சொல்லுவதுண்டு. நாம் ப்ரமாணசரணர்கள். தேசிகர் ஸாதித்த வேகாஸேது ஸ்தோத்ரமென்கிற ஸ்ரீயதோக்தகாரி ஸ்தோத்ரத்தில் ஆறும் சுலோகத்தில் இவ்வைதிஹ்யம் வெகு சமத்காரமாக அநுஸந்திக்கப்பட்டுள்ளது. "ப்ரத்யாதிசந்தி பவஸஞ்சரணம் ப்ரஜாநாம் பக்தாநுகந்துரிஹ யஸ்ய கதாகதாநி" என்பது அந்த சுலோகம். இதன் கருத்தாவது, யதோக்தகாரி யெம்பெருமான் பக்தனைப் பின்சென்று, போவதும் வருவதுமான ஸஞ்சாரம் செய்தருளினபடியை யநுஸந்தித்தால் அஸ்மதாதிகளுக்கு ஸம்ஸார காந்தாரத்தில் போவது வருவதான ஸஞ்சாரம் தொலையுமென்கை. மஹாமேதாவிகளான பூருவர்களுக்குத் தோன்றாத

அநுபபத்திகளன்ரே இக்காலத்து விமர்சகர்களுக்குத் தோன்றுகின்றன. தேசிகர் சொல்லியிருக்கிருர், மற்ருெருவர் சொல்லியிருக்கிருர் என்று கூறிவிட்டால் இதனுல் ஆக்ஷேபகர்களுக்கு ஸமாதானமாய்விடுமா? என்று சிலர் சொல்லக்கூடும். நாம் நம் பூருவாசாரியர்களை வ்யாஸபராசராதி மஹர்ஷிகளுக்கும் மேலாகக் கொள்ளு மவர்கள்; அந்த பூருவர்கள் தமிழ் வசனமாக ஏதேனும் எழுதி வைத்திருந்தால் அதில் பின்னிட்டு ப்ரக்ஷிப்தமாயிருக்குமோவென்று சங்கிக்க இடமுண்டு. உலக மெங்கும் கண்டபாடமாக வைத்துக்கொண்டு அநுஸந்தானம் செய்துவரும் சுலோகபத்தமான நூல்களில் அவ்வாறு சங்கிப்பதற்கு இடமே கிடையாது; அந்த நூல்கள் 600, 700 வருஷங்களாக எவ்வித ஆக்ஷேபணையுமில்லாமல் விளங்கி வரும்போது அவற்றில் அவிச்வாஸம் கொள்ளுமவர்களிருந்தால் அவர்களைப்பற்றி நமக்குக் கவலையே வேண்டா. அன்னவர்களைத் தெளிவுபடுத்த நம்மாலாகாது; நம்மைப் படைத்தவனுலுமாகாது. ... ... ... ... *

## — திருமங்கையாழ்வாரைதிஹ்யத்தைப்பற்றி —

205. திருமங்கையாழ்வார் நாகப்பட்டினத்தில் ஸ்வர்ணமயமாயிருந்த ஜைந பௌத்த விக்ரஹங்களை அபஹரித்துக் கொண்டுவந்து ஸ்ரீரங்க ப்ராகார மண்டபாதி நிர்மாண கைங்கர்யத்தில் உபயோகித்தார் என்று குருபரம்பராப்ரபா வத்தில் எழுதப்பட்டுள்ள சரித்திரம் மிகவும் அநீதியான வரலாறென்றும், ப்ராமாணி கர்களாய் யோக்யர்களாய்ப் பரம பக்தர்களான ஆழ்வார்கள் இப்படி அநீதியான செயல்களைச் செய்தார்களென்று எழுதிவைப்பது நமது பரமபாவனமான மதத்திற்கு இழுக்காகும்'' என்றும் சிலர் வாதிக்கிருர்கள்; தமிழ் வசனநூல்களில் பின்ஞேர் களால் சேர்க்கப்பட்டதென்கிருர்கள். இதுவும் தவறு; பட்டர் ஸ்ரீ ரங்கராஜ ஸ்தவத்தில், *ஜிதபாஹ்ய ஜிநாதி மணிப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணிமண்டப வப்ரகணுந் விததே பரகால கவிः ப்ரணமேமஹி தாந்* என்கிற ச்லோக ரத்நத்தில் நிஸ்ஸந்தேஹமாகப் பொறித்து வைத்த திருமங்கையாழ்வாரது சரித்திரத்தை அநியாயக் கதையென்று சொல்லிவிட்டால் இதை ஸ்ரீவைஷ்ணவ வுலகம் ஏற்குமா? அந்த ச்லோகம் பிற்காலத்தவர்களால் கற்பிக்கப்பட்டு பட்டர் ஸ்ரீஸூக்திமத்யே புகுத்தப்பட்டதென்று நெஞ்சினுலும் நினைக்க முடியாதே; இவ்வளவு கம்பீரமான ச்லோகம் பட்டர் தவிர வேருெரு வ்யக்தியால் நிருமிக்க முடியுமா? ஏறக்குறைய ஆயிரம் வருஷங்களுக்கு முன்பு அவதரித்த இந்த ச்லோகத்தைக் காற்கடைக்கொண்டு, நெஞ்சில் தோன்றினபடியெல்லாம் பேசு மவர்களைப் பற்றி நமக்கென்ன கவலை? ... ... ... *

## — நம்பத்தகாத ஐதிஹ்யம் —

206. திருவாய்மொழியில் (9-10-5) "சரணமாகும் தனதாளடைந்தார்க் கெல்லாம், மரணமானுல் வைகுந்தம் கொடுக்கும் பிரான்" என்கிற பாசுரத்தில் ஓர் ஐதிஹ்யம் ஆங்காங்குள்ளவர்கள் சொல்லி வருகிருர்கள். அதாவது, "மரணமாக்கி வைகுந்தம் கொடுக்கும் பிரான் என்று ஆழ்வார் திருவாக்கில் பாடம் வெளிவந் திருந்ததாகவும், ஸ்ரீமந்நாதமுனிகள் போல்வார் அதைக்கண்டு "இப்படியிருந்தால்

எம்பெருமான் திருவடிகளில் யாரும் பணியமாட்டார்கள்; வந்து சேர்ந்தவர்களை யெல்லாம் மரணமாக்கி வைகுந்தம் கொடுக்குமவனென்று தேறினால் யாரும் அணுகமாட்டார்களன்றோ; ஆகவே இப்பாடத்தை மாற்றியேயாகவேண்டும்" என்று துணிந்து "மரணமானால்" என்று திருத்திப் பாடம் வழங்கலாயினர் என்பதாகவும் ஐதிஹ்யம் சொல்லக்கேட்கிறோம்; இது உண்மைக்கு மிக மாறானது. இது ஸம்ப்ரதாய நெறியிற்படிந்த பெரியார்களுக்கு உடன்பாடன்று. மரணமாக்கி யென்று பாடமிருந்திருந்தால் அதை மாற்றவேண்டிய அவசியமில்லை. அப்படி மாற்றுவதானால் இதுபோன்ற மற்றும்பல பாசுரங்களையும் மாற்றவேண்டிவரும். திருவாய்மொழியிலேயே இரண்டாம்பத்தின் முடிவு பாசுரம் "அருளுடையவன் தாள் அணைவிக்கும் முடித்தே" என்பது; இதில் 'முடித்து' என்பதற்கு மரணமாக்கி யென்பதன்றோ பொருள். அதை மாற்றாமல் இதைமாத்திரம் மாற்றுவானேன்? ... *

## — மரணமானாலென்கிற பாடத்தின் தகுதியும் சுவையும் —

207. அன்றியும், ஆழ்வார் திருவாக்கில் 'மரணமானால்' என்கிற பாடமே வெளிவந்ததாக ஸகல பூர்வாசாரியர்களும் நன்குகாட்டி வியாக்கியானஞ் செய்துள் ளார்கள். *மாலை நண்ணி* என்கிற திருக்கண்ணபுரப் பதிகத்திலன்றோ *மரண மானாலென்கிறவிந்தச் சந்தையுள்ளது, அப்பதிகத்திற்கு இந்தச்சொல்லே உயிரான தென்று கொண்டு வியாக்கியானஞ் செய்தருளியுள்ளார்கள். சரீராவஸானத்திலே உம்முடைய விருப்பம் நிறைவேற்றக்கடவோம்" என்று ஆழ்வாரை எம்பெருமான் ஸமாதானம் பண்ணினதாகவும், அதை ஆழ்வார் "மரணமானால் வைகுந்தம் கொடுக்கும்பிரான்" என்று தம்முடைய அநுஸந்தானத்தாலே வெளியிட்டதாகவும் பதிகத்திற்கு ப்ரவேசம் அருளிச்செய்துள்ளார்கள். பாசுர வியாக்கியானத்திலும் "இப்பாட்டில் மரணமானாலென்றதைக் கொண்டிறே கீழ்ச்சொன்ன நிரூபணமெல் லாம்" என்று இருபத்துநாலாயிரத்திலும் முப்பத்தாறாயிரத்திலுமுள்ளது. மணவாள மாமுனிகளும் திருவாய்மொழி நூற்றந்தாதியில் இப்பதிகத்தின் ஸாரமாக இட்டருளின பாசுரத்தில் "மால் உமது வாஞ்சைமுற்றும் மன்னுமுடம்பின் முடிவில், சால நண்ணிச் செய்வனெனத் தானுகந்து" என்றருளிச் செய்துள்ளனர். ஆசார்ய ஹ்ருதயத்திலும் (4-9) "இனிப்பத்தி லொன்று தசமதசையிலே பேறென்று ........ நாளிடப் பெற்றவர்" என்றுள்ளது. ஆழ்வார்க்கு எம்பெருமான் நாளிட்டுக் கொடுத்ததாகவும் அதை ஆழ்வார் தம் திருவாக்கால் அநுவதிப்பதாகவுமன்றோ வஸ்துஸ்திதியில் ப்ரமேயமுள்ளது. ஆகவே "மரணமாக்கி வைகுந்தங் கொடுக்கும் பிரான்" என்று பாடமிருந்ததாக ப்ராமாணிகர்கள் நெஞ்சால் நினைக்கவும் நியாய மில்லையென்று சுருக்கமாகத் தெரிவித்தபடி. ... ... .... *

## — எம்பெருமானாரும் தென்னத்தியூரர் கழலிணையும் —

### (இதுபற்றி மூன்று விருந்துகள்)

208. "தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப் பூண்டவன்பாளனிராமாநுசன்" என்று நூற்றந்தாதி லருளிச்செய்யும்படியாக எம்பெருமானார்க்குத் தேவப்பெரு

மாள் திருவடியிணையில் அன்புமிகுந்திருப்பதற்கு உரிய காரணம் ஏதேனுமுள்ளதோ வென்னில்; திருவரங்கம் பெரியகோயிலில் ஸ்ரீவைஷ்ணவ தர்சன துரந்தரராக வாழ்ந்துவந்த ஆளவந்தார் காஞ்சீபுரியில் ஸ்ரீராமாநுஜருடைய ப்ரபாவங்களைக் கேட்டு இவரைக் காணவேணுமென்னு மாவலுடனே காஞ்சிக் கெழுந்தருளி ஸ்ரீஹஸ்திகிரியிலே மங்களாசாஸனஞ் செய்து கீழே திருப்புற்றினருகே திருவனந் தாழ்வானையும் கரியமாணிக்கப் பெருமாளையும் ஸேவியாநிற்க. அங்கே யாதவ ப்ரகாசர் தம் வித்யார்த்திகளின் ஸமூஹத்துடனே பெருமாளை ஸேவித்து அவ் விடத்தே ப்ரதக்ஷிணமாக வாராநிற்க, ஆளவந்தார் தம் அருகேயிருந்த திருக்கச்சி நம்பியை நோக்கி 'இத்திரளிலே இளையாழ்வார் யாவர்?' என்று கேட்க, அவரும் 'அதோ சிவந்து நெடுகி ஆஜாநு பாஹுவாய் வருகிறவர்' என்று காட்ட, ஆள வந்தாரும் திருவுள்ளம் பூரிப்பக் குளிரநோக்கியருளி "ஆம் முதல்வனிவன்?" என்று விசேஷகடாக்ஷம் செய்தருளியும், தேவப்பெருமாளை நோக்கி *யஸ்ய ப்ரஸாதகலயா பதிர: ச்ருணோதி பங்கு: ப்ரதாவதி ஜவேந ச வக்தி மூக:; அந்த: ப்ரபச்யதி ஸுதம் லபதே ச வந்த்யா தம் தேவமேவ வரதம் சரணம் கதோஸ்மி* என்ெருரு ச்லோகத் தால் இளையாழ்வார் நம் தர்சன ஸ்தாபகராம்படி அருள் புரிகைக்காகச் சரணுகதி செய்தும் எழுந்தருளினுரென்று இதிஹாஸம். ஆக தேவப்பெருமாளுடைய திருவரு ளடியாகவே ஸ்வாமி விசேஷ அபிவிருத்தியை யடைந்ததனுலே இதுபற்றித் தென்னத்தியூரர் கழலிணைக்கீழ் அன்புபூண்டிருந்தாரென்பர் ... ... *

— வேருெரு காரணமுங் கேண்மின் —

209. யாதவப்ரகாசருடைய கங்காயாத்திரையிலே ஸ்வாமியும் அந்வயித்து எழுந்தருளுகையில், விந்தியாடவியில் நிர்ஜலமும் நிர்ஜனமுமான நீள் காட்டிலே பிரிந்து திரும்ப வேண்டியதானபோது *ஆவாரார்துணையென்று அலைநீர்க்கடலு ளழுந்தும்நாவாய்போல் துளங்கி நின்று வழிதிகைத்தலமந்து நிற்கையிலே, தேவப் பெருமாள் ஒரு வில்லியாகவும் பெருந்தேவித் தாயார் அவனது மனைவியாகவும் வேடம்பூண்டு ஸ்வாமிக்குத் துணையாக வந்து சேர்ந்து வழிநடத்தி ஓரிரவிலேயே கச்சிப்பதியில் கொணர்ந்து சேர்த்தும், சாலக்கிணற்றில் ஸ்வாமி திருக்கையால் தீர்த்தம் வாங்கிப் பருகி விடாய் தீர்ந்ததற்கு அறிகுறியாக அன்றுமுதல் ஸ்வாமி நாடோறும் சாலக்கிணற்றில் நின்றும் தீர்த்தம் கொணர்ந்து ஸமர்ப்பித்து வந்தா ரென்னுமைதிஹ்யத்தை யதிராஜஸப்ததியில் *வந்தே தம் யமிநாம் துரந்தரமஹம்* என்கிற ச்லோகத்தில் * தத்தம் யேந தயாஸுதாம்புநிதிநா பீத்வா விசுத்தம் பய: காலே ந: கரிசைலக்ருஷ்ண ஜலத: காங்க்ஷாதிகம் வர்ஷதி * என்ற உத்தரார்த்தத்தில் பொறித் தருளினுர் வேதாந்தவாசிரியர். இதுவும் ஒரு காரணந்தான். .... .... *

— தென்னத்தியூரர் கழலிணைக்கீழ் அன்புபூண்டிருந்தமைக்கு முக்கியமான காரணங் கேண்மின் —

210. யஜ்ஞமூர்த்தி யென்னுமத்வைதிஸந்நியாஸியின் வரலாறு முன்னமே யெழுதப்பட்டுள்ளது. அவரோடு நடந்த வாதப்போரில் முடிவாகவொரு விஷயத் திற்கு விடையிறுக்கமுடியாமல் 'நாளைக்கு ஆகிறது' என்று சொல்லி வந்து மிகவும்

வியாகுலராய் அமுது செய்யாமலே திருக்கண்வளர்ந்தருளாநிற்க, அன்றிரவு தேவப்பெருமாள் கனவிலே யெழுந்தருளிக் காட்சிதந்து மாயாவாதியின் வாயடங் கும்படியான சில அர்த்த விசேஷங்களை ஸ்புரிக்கச் செய்து மறைய, ஸ்வாமி உள்ளந்தேறி அந்த யஜ்ஞமூர்த்தியைத் திருத்திப் பணிகொண்டு தேவப்பெருமா ளுடைய ப்ரஸாதமடியாகவே இவர் ஆட்பட்டாரென்கிற உபகார ஸ்மிருதி உலக ப்ரஸித்தமாம்படி அருளாளப் பெருமாளெம்பெருமானுர் என்று அவர்க்குத் திருநாமம் சாத்தியருளினுர். இவ்விதிஹாஸமும் எம்பெருமானுர் தென்னத்தியூரர் கழலிணைக்கீழ் அன்பு பூண்டிருப்பதற்கு உபபாதகமாகும். .... .... .... *

## — ஊர்த்வம் மாஸாந்ந ஜீவேயம் —

2!1. அசோகவனத்திலிருந்த பிராட்டி திருவடிமூலமாகப் பெருமாளுக்குச் செய்தி சொல்லியனுப்ப, அதைப் பெருமாளிடம் விண்ணப்பம் செய்யாநின்ற திருவடி, *ஜீவிதம் தாரயிஷ்யாமி மாஸம் தசரதாத்மஜ!, ஊர்த்வம் மாஸாந்ந ஜீவேயம்* என்று சொன்னதையும் விண்ணப்பஞ் செய்தான். இனி ஒருமாத மளவுதான் ஜீவித்திருப்பேன், அதற்குமேல் ஜீவித்திருக்கமுடியாது' என்று பிராட்டிசொன்ன வார்த்தை. இப்படிச் சொல்லக் கேட்ட பெருமாள் "அப்படியா? என்னைப்பிரிந்த பிராட்டி இன்னமும் ஒருமாதம் வரை ஜீவித்திருப்பளா? அப்படி ஒருமாதம் ஜீவித் திருந்தாளாகில் அவள் நீடூழிகாலமும் ஜீவித்திருக்க வல்லவளே. என்னுல் அப்படி ஜீவித்திருக்க முடியாது; [*ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாம் அஸிதேக்ஷணும்*] குவளையங் கண்ணியான அப்பிராட்டியின்றிக்கே ஒரு நொடிப்பொழுதும் ஜீவிக்ககில்லேன் நான்" என்று கூறியிருக்கிருர். இவ்விரண்டு வார்த்தைகளையும் சேர்த்து ஆராயு மிடத்து விச்லேஷத்தில் தரியாமையென்னும் விஷயத்தில் பிராட்டிக்குத் தாழ்வும் பெருமாளுக்கு ஏற்றமும் ஏற்படுகின்றதல்லவா? இது கூடுமோ? *அகலகில்லே னிறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பா* என்று ஆழ்வாரருளிச் செய்தபடி ஒரு நொடிப்பொழுதும் அகலகில்லேனென்று சொல்லுபவள் பிராட்டியல்லவா? அப்படிப்பட்டவளன்றே 'ந ஜீவேயம் க்ஷணமபி' என்று சொல்லவேண்டும். அவள் ஊர்த்வம் மாஸாத் ந ஜீவேயம் என்று ஒரு மாதம் விச்லேஷத்தை ஆற்றியிருக்க முடியுமென்பதும் 'ந ஜீவேயம் க்ஷணமபி' என்று க்ஷணகாலமும் பிரிவாற்றகில்லே னென்று பெருமாள் சொல்லுவதுமாக வான்மீகி முனிவர் வசந விந்யாஸம் செய் திருப்பது நன்ருேவென்னில்; மேலே யெடுத்துக்காட்டிய திவ்ய தம்பதிகளின் வசனங்களை ஆழ்ந்து நோக்குமிடத்துப் பிராட்டிக்கே பெருமை விளங்கும். எங்ஙனே யென்னில்; பிராட்டியின் திருமேனியழகைக் காட்டிலும் பெருமாள் திருமேனியழகு மிகவும் குறைந்ததென்பது இங்குத் தெரியவருகிறது. பிராட்டியின் திருமேனி யழகெல்லாம் ஒரு தட்டாய், கண்ணழகு மாத்திரமே ஒரு தட்டாயிருக்கையினுலும், அதுதானும் *பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரியென்று பேர்பெற்ற இராமபிரானது ஸௌந்தர்யத்திற்காட்டிலும் விறுபெற்றிருக்கையாலும் அப்படிப்பட்ட பிராட்டியின் க்ஷணகாலவிச்லேஷமும் அஸஹ்யமென்பது பெருமாளுடைய திருமுகப் பாசுரத்தி ஞல் [விநா தாம் அஸிதேக்ஷணும் என்பதனுல்] வெளிவந்து பிராட்டியின் பெருமையை நிலைநாட்டி நின்றது. ஒருமாஸம் பிரிவாற்றியிருப்பேனென்ற பிராட்டியின்வார்த்தை

இதற்குப் பிரதிகோடியாய் பெருமாளைப் பிரிந்து ஒருமாதம் ஜீவித்திருக்க முடியு மென்று சொன்ன முகத்தால் பெருமாளுடைய வடிவழகு அவ்வளவு சிறந்ததன் றென்பது காட்டிற்ருயிற்று. இவ்வர்த்தவிசேஷத்தை வெளியிடுவதே இவ்விடத் திற்கு முக்கியமானது. பெருமாளுடைய வடிவழகைக் குறைத்துப்பேசலாமா என்கிற அசட்டுக்கேள்வி இங்குவேண்டா. ... ... .... *

## — பிராட்டியின் புருஷகாராவச்யகதை (நான்கு விருந்துகள்) —

212. எம்பெருமானுக்கு உபாயத்வமும் உபேயத்வமுமாகிற இரண்டு தன்மைகளுண்டானுப்போலே பிராட்டிக்குப் புருஷகாரத்வமும் உபேயத்வமுமாகிற இரண்டு தன்மைகளுண்டு. எம்பெருமானுடைய நாராயணத்வ ப்ரயுக்தமான ஸ்வாபாவிக ஸம்பந்தத்தைத் தெரிந்துகொண்டு அவனை ஆச்ரயிக்கும்போது இவளைப் புருஷகாரமாக முன்னிடவேண்டிய அவசியம் என்ன? என்னில்; குளிர்ந்த ஜலத்திலும் கொடிதான நெருப்பு [பாடபாக்நி] கிளருமாபோலே ஸர்வபூத ஸுஹ்ருத் தான அவன்திருவுள்ளத்திலே, சேதநன் அளவுகடந்துபண்ணும் அபராதமடியாகச் சீற்றம் பிறப்பதுமுண்டே; அங்ஙனே சீற்றம்பிறந்தால் அவ்வபராதத்தைப் பொறுப் பது இப்பிராட்டிக்காகவே; தன்னுடைய உபதேசாதிகளாலே அச்சீற்றத்தை யாற்றி தயையை ஜனிப்பிக்குமவள் பிராட்டி. ஆகையாலே ஸம்பந்தவுணர்ச்சி யுள்ளவ னுக்கும் அபராத பயத்தாலே புருஷகார புரஸ்கரணம் அவசியமேயாகும். ... *

## — பிராட்டிபுருஷகாரத்தின் மேன்மை —

213. பிராட்டியின் புருஷகாரம் அவ்வளவு காரியம் செய்யுமா? விபல மாகாதா? என்னில்; *அகில ஜகந்மாதரம்* என்கிறபடியே சேதனர்க்கு இவள் மாதா வாய் அந்த ஸம்பந்தமடியாக இவர்களது வருத்தங்கண்டு பொறுத்திருக்கமாட் டாதேயிருக்கிற வொரு தன்மையும், எம்பெருமானுக்குப் பத்னியாய் *பித்தர் பனி மலர்மேல் பாவைக்கு* என்கிறபடியே அவன் தன் வைலக்ஷண்யத்தைக் கண்டு பிச்சேறித் தன் சொற்படி நடக்கும்படி அபிமத விஷயமாயிருக்கிறவொரு தன்மை யும் உடையளாகையாலே இவளுடைய புருஷகாரம் ஒருவகையாலும் விபலமாகாது.

## — பிராட்டி புருஷகாரம் விபலமாகாதென்கைக்கு நியாமகம் —

214. விபலமாகமாட்டாதென்று எதுகொண்டுகெட்டியாகச் சொல்லு வது என்னில்; உலகில் புருஷகாரம் செய்பவர்களுக்கு இரண்டு தன்மைகள் வேண்டும்; எவர் விஷயத்தில் புருஷகாரம் செய்யவேணுமோ அவர் விஷயத்தில் நெஞ்சார்ந்த அன்பு இருக்கவேண்டியது ஒன்று; யாரிடத்தில் புருஷகாரம் செய்ய வேணுமோ அவரிடத்தில் தம் வாக்கு வெற்றிபெற்றே தீரும்படியான வால்லப்ய மிருக்கவேண்டியது மற்ரென்று. இவ்விரண்டும் பிராட்டியிடத்தே புஷ்கல மென்பது நிர்விவாதமான விஷயம். ஆகவே பிராட்டியின் புருஷகாரம் ஒருபோதும் விபலமாகாது. ... ... ... ... .... *

## — பிராட்டி புஷருகாரச்சிறப்பைத் திடப்படுத்துதல் —

215. ஈச்வரனே கேட்பாரற்ற ஸ்வதந்திரன்; அன்னவன் சேதநருடைய குற்றங்களை நிறுத்து அவற்றுக்குத் தக்கபடி தண்டனை செலுத்தியே தீர்வேன் என்று நிற்குமளவில் பிராட்டிதான் என்னசெய்யமுடியுமென்னில், இது இவளுடைய

செய்தியறியாத சிறியார் செய்யும் ஆக்ஷேபமாகும். இவள் ஸீதையாகப்பிறந்து சிறையிருந்த காலத்தில் இவளைப் பத்து மாதம் இடைவிடாது படாத பாடுகளும் படுத்தின ராக்ஷஸிகளின் கொடுமையை முன்னம் மரத்தின்மேல் மறைந்திருந்து கண்ட அனுமன் 'பெருமாள் வெற்றிபெற்ற பின்பு இவர்களைப் பார்த்துக்கொள் வோம்'' என்று ஆறியிருந்து ராவணவதமான பின்பு ஓடிவந்து 'இவ்வரக்கிகளின் அபராதங்களைக் கணக்கிட்டு சித்ரவதம் பண்ண நினைத்திருக்கு மெனக்கு இடமளிக்கவேணும்' என்று (பிராட்டியை நோக்கிக்) கேட்டவளவிலே, சொல் மிறுங்கனுன அவ்வனுமனையுமுட்பட இவள் உபதேசத்தாலே பொறுப்பித்தா ளென்பது ஸ்ரீராமாயண 'ப்ரஸித்தம். அப்படிப்பட்ட விவள் *அல்லி மலர் மகள் போகமயக்குக்களாகியும் நிற்குமம்மான்* என்கிறபடியே தன் போக்யதையிலே மிகவும் ஈடுபட்டிருப்பவனாய் *நின்னன்பின் வழிநின்று சிலைபிடித்தெம்பிரானேக* என்கிறபடியே 'மாயா மிருகத்தின் பின்னே போ' என்றாலும் விளைவதறியாதே அதின் பின்னே தொடர்ந்து போமவனாய் இப்படி தனக்கு விதேயனாய் ரஸிகனா யிருக்குமவனைப் பொறுப்பிக்கவல்லளென்பது பற்றிக் கேட்கவேணுமோ? .... *

## — எம்பெருமானை நாம் எப்போது பற்றவேணும்? —

216. நாம் எம்பெருமானை ஆச்ரயிப்பதற்கு ஏதேனும் காலம் பார்க்க வேண்டியதுண்டோ வென்னில்; த்வயத்திலுள்ள ஸ்ரீமச்சப்தத்தினால், புருஷகார பூதையான பிராட்டியும் ஈச்வரனுமான இருவருடையவும் சேர்த்தியானது எப்போது முண்டென்று காட்டப்பட்டதாகும். ஞானம் ஆனந்தம் முதலியவை எப்படி எம்பெருமானுக்கு ஸ்வரூப நிருபகங்களோ அப்படி ஸ்ரீபதித்வமும் நிருபகமாகை யாலே இவளோடே கூடியே ஈச்வர ஸத்பாவமென்று கொள்க. சேதனர்களின் அபராதங்களைக் கணக்கிட்டு தண்டிக்கவல்லவனான எம்பெருமானுடைய ஸ்வாதந் திரியத்தையும், சேதநர் செய்யும் குற்றங்களின் மிகுதியையுங் கண்டு 'ஐயோ? என்னாகுமோ!' என்கிற பயத்தாலே எம்பெருமானை விட்டு ஒரு நொடிப்பொழுதும் அகலமாட்டாள், இப்படி இவளிருந்து நோக்குகையாலே ஈச்வரனுடைய ஸ்வாதந் திரியத்தைக் கண்டோ தன்னுடைய அபராதங்களை நினைத்தோ சேதநன் அஞ்ச வேண்டிய ப்ரஸக்தியில்லை. ஆக, பிராட்டியானவள் எப்போதும் எம்பெருமானோடு கூடியே யிருக்கின்றாளென்று தெரிந்துகொள்ளுமளவில் எந்த ஸமயத்திலும் எம்பெருமானை ஆச்ரயிக்கலாமென்பது தேறி நிற்கும். 'புருஷகாரம் செய்பவள் அருகே யிருக்குங்காலம் பார்த்து ஆச்ரயிக்கவேணும்' என்று ஸமய ப்ரதீக்ஷை வேண்டியதில்லை; ஆச்ரயிக்கவேணுமென்கிற ருசி பிறக்கவேண்டுவதத்தனையே.

## — திருவடி மோக்ஷத்தை விரும்பவில்லை —

217. திருவடியென்று வழங்கப்படுகிற அனுமான் *அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றிப் பெருமாள் தன்தாமமேவின காலத்தில் பரமபதம் சென்று சேர்ந்தவர்தானே; அவர் இன்னமும் இந்த விபூதியிலேயே இருப்பதாகச் சொல்லப் படுகிறதே, இது ப்ராமாணிகமாகுமோ? என்பது சிலருடைய சங்கை. அந்த அனுமான்தானே *ஸ்நேஹோ மே பரமோ ராஜந்! த்வயி நித்யம் ப்ரதிஷ்டித:, பக்திச் ச நியதா வீர! பாவோ நாந்யத்ர கச்சதி:* என்று சொல்லி தான் பரமபதத் திற்கு வருவதை மறுத்துவிட்டதாக உத்தர ஸ்ரீராமாயணத்தில் சொல்லப்பட்டிருக் கிறது. ''பரமபதத்தின் பேர் சொல்லுகைதானும் அஸஹ்யமாகையாலே (அந்யத்ர) என்கிறார் என்று நம் ஆசாரியர்கள் அருளிச்செய்துமிருக்கிறார்கள். ... *

— நாடோறும் துயில்விட்டெழுந்ததும் சிந்தனைசெய்ய —

218. எம்பெருமான் தன் இயற்கையின்னருளால் நமக்குப் பெறுவித்திருக்கும் பெருமைகளை நாம் மனமாரச் சிந்திக்கவேண்டும். நவத்வீபவதியான இந்த நானிலத்தில் த்வீபாந்தரங்களில் நாம் பிறந்திருந்தால் என்ன நன்மையை எய்த முடியும்? ஆத்ம க்ஷேமங்களில் ஒருவகையான க்ஷேமத்தையும் நாம் அனுபவிக்க நேராது. பெரியாழ்வார் * நாவலம் பெரிய தீவினில் வாழும் நங்கைமீர்களிதோ ரற்புதங்கேளீர் * என்று உகந்து உள்ளம்பூரித்து உரைக்கும்படியான அரியபெரிய ஜம்பூத்வீபத்திலே பரதகண்டத்திலே நாம் பிறவி பெற்றது பேரருளாளன் பரம க்ருபையன்றோ. அதுதன்னிலும் க்ரிமிகீட பசுபதங்காதி ஜன்மங்களிலன்றிக்கே *மானிடப்பிறவியந்தோ மதிக்கிலர்* என்று மங்கையர்கோன் மதிக்கும்படியான துர்லப மாநுஷயோநியிலே பிறவி பெறுவித்தான் பரம காருணிகன். அந்த மானிடப்பிறவியிலும் ஸ்வாத்யாய ப்ரவசனங்களுக்கு உரித்தல்லாத யோனிகளிலே புகவிடாமல் வேதமோத நிலமான அந்தணர்குலத்திலே நம்மைத் தோற்றுவித்தனன் அபார கருணாநிதி. அதுதன்னிலும் *த்ருச்யம் மித்த்யா த்ருஷ்டிகர்த்தா ச மித்த்யா தோஷோ மித்த்யா* என்று எல்லாம் மித்த்யை யென்றிருக்கையன்றிக்கே *பொய்யைச் சுரக்கும் பொருளைத் துறந்து இந்தப் பூதலத்தே மெய்யைப புரக்கு மிராமாநுசன்* என்று அமுதனார் போற்று மிராமானுசனை வழிபடுங்குடியிலே பிறப்பித்தனன் பேரருளாளன். இவ்வளவுக்கும் மேற்பட—கருவிலேயிறத்தல் பிறந்ததும் மறைதல், சிலநாளிருந்து சாதல், பிணிபசிகளால் வருந்தி வாணாளை வீணாளாகக் கழித்தல் முதலிய ஆபத்துக்களின்றிக்கே *வேதநூற்பிராயம் நூறிலே பெரும் பகுதியை ஆனந்தமயமாகச் செல்லவைத்தனன் அருட்கடலான அமலன் என்று நாடோறும் சிந்தித்து மகிழ்வோமாக. .... .... .... *

— விசேஷித்து நம்முடைய பாக்கியத்தை நாடோறும் சிந்திக்க —

219. இத்தனைக்கும் மேலாக * மணவாளமாமுனிவன் பொன்னடியாஞ் செங்கமலப் போதுகளைப்போற்றுங்குடியில் பிறவிதந்த பெருமானுடைய பேரருளைப் பற்றிப் பேசத்தானாவதுண்டோ? அரியபெரிய இப்பிறவி பெற்றும் அப்பேராசிரியருடைய பொன்மொழிகளின் பெருமையையறிந்து அவற்றிலே போதுபோக்காதே புன்மொழிகளால் போதுபோக்குவார் திரளிலே புகாது *முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப்பெற்றோம் முழுதும் நமக்கவை பொழுதுபோக்காகப் பெற்றோமென் றிருககும் பாக்கியம் நீடூழி வாய்க்குமேல் *இமையவர் சூழவிருக்கும் பேரின்ப வெள்ளம் இதுவேயாகுமன்றோ. * மற்றிங்கோர் புதுத்தெய்வங்கொண்டாடும் தொண்டீர்!* என்ற மங்கைமன்னன் முதுமொழிக்கு இக்காலத்தில் முக்கிய லக்ஷ்யமாயிருக்குமவர்கள் நாடோறும் துயில்விட்டெழுந்தவுடனே இத்தூய மொழி மாலையைச் சிந்தித்து "நமக்கு மணவாள மாமுனிகளின் திருவடிகளிலும் திருமொழிகளிலும் பக்திச் செல்வமுண்டாகாவிடினும் அத்வேஷ நிலையையாவது அருள் செய்யவேணுமருளாளன்" என்று நெஞ்சார வேண்டிநிற்பது நன்று. ... *

— உபநிஷத்து ஓதிய மநுஷ்யானந்தம் —

220. தைத்திரீய—உபநிஷத்தில் ஆனந்தவல்லி யென்பது ஒரு பகுதி. அதில் பரப்ரஹ்மத்தினுடைய ஆனந்தம் அளவிட முடியாததென்று ஓதக்கருதியு

வேதபுருஷன் அதை ஒரேவார்த்தையில் சொல்லி முடிக்கலாமாயிருக்க, அங்ஙனம் சொல்லாமல், உலகத்தில் ஒரு மனுஷ்யனுக்கு எளிதாக ஸம்பவிக்க முடியாத ஆனந்தத்தை யெடுத்துக்கூறி அத்தகைய ஆனந்தம் வாய்ந்த ஒரு மநுஷ்யனிருப்ப தாக வைத்து, அவனுக்கு மேன்மேலாகப் பலபேர்கள் இருப்பதாகவும் வைத்து, கீழ்ச்சொல்லப்பட்டவர்களைக் காட்டிலும் மேன்மேலும் சொல்லப்படுகிறவர்களின் ஆனந்தம் நூறுமடங்கு அதிகமாக இருப்பது போலவும் கற்பித்துக்கொண்டுபோய் அப்படிப் பெருக்கிக் கடைசியாகத் தேறும் ஆனந்தம் பரப்ரஹ்மானந்தம்—என்று சொல்லப்பார்த்து அதிலும் த்ருப்திபெருமல் *யதோ வாசோ நிவர்த்தந்தே* என்றுரேதி 'நின்றது. ப்ரஹ்மானந்த மிருக்கட்டும். *ஸைஷா ஆநந்தஸ்ய மீமாம்ஸா பவதி* என்று ஆரம்பித்து முந்துறமுன்னம் விளக்கின மநுஷ்யானந்தத்தை விவரிப்போம்.

221. ["யுவா ஸ்யாத் ஸாதுயுவாத்யாயக:. ஆசிஷ்டோ த்ருடிஷ்டோ பலிஷ்ட:, தஸ் யேயம் ப்ருதிவீ ஸர்வா வித்தஸ்ய பூர்ணு ஸ்யாத். ஸ ஏகோ மாநுஷ ஆநந்த:."] இந்த வாக் யங்களைச் சிறிது விவரிக்கிறேன். [யுவா ஸ்யாத்] *முற்றமூத்துக்கோல் துணையா முன் னடி நோக்கி வளையாமலும், *முதுகுபற்றிக் கைத்தலத்தால் முன்ஞெருகோலூன்று மலும், *கண்ணுஞ்சுழன்று பீளையோடு ஈளைவந்தேங்காமலும் எப்போதும் யௌவன பருவமாகவே யிருக்கப்பெறுதல். [ஸாது யுவாத்யாயக:] தன்னேடொத்த யுவாக்களை நன்கு ஓதுவிக்கவல்லவனுயிருத்தல். தான் ஓதாமல் பிறரை யோதுவித்தல் அரிதாதலால். ஆக *அதீத மத்யாபித மார்ஜிதம் யச:* என்னும்படி யிருக்கை சொல்லிற்ருயிற்று. இதற்குமேல் [ஆசிஷ்ட:] இதற்கு மூவகைப்பொருள் கூறப்படு கிறது (1) ஆசீர்வாதத்திற்கு உரியவன். (அதாவது) நற்குணமிகுதிகண்டு நீ பல்லாண்டு பல்லாண்டு வாழவேணுமென்று பெரியோர்களால் வாழ்த்தத் தகுந்த வனுயிருக்கை. *ஸ்த்ரியோ வ்ருத்தாஸ் தருண்யச் ச ஸாயம்ப்ராதஸ் ஸமாஹிதா:, ஸர்வாந் தேவாந் நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே யசஸ்விந:* என்று இராமபிரா னுடைய குணங்களிலீடுபட்ட அயோத்யாவாஸிகள் அல்லும் பகலும் அவனுக்காக ஸர்வதேவதாநமஸ்காரம்பண்ணிக்கொண்டுவந்தார்களென்பதை இங்குநினைப்பது. இத்தால் ஸர்வஜநரஞ்ஜகத்வம் சொன்னபடி. (2) அசநசீல: என்பது இரண் டாவது பொருள். வயிருரவுண்பவ னென்றபடி. வாயைக்கட்டி வயிற்றைக் கட்டிப் பணத்தைப் புதைத்து வைப்பவனன்றிக்கே நன்ருகத்தின்று அநுபவிக்கை பெருப்பேறன்ரே. *போஜ்யம் போஜந சக்திச் ச நால்பஸ்ய தபஸ:ப்பலம்* என்பர்கள். நோயற்றவாழ்வே குறைவற்ற செல்வமாக இருக்கப்பெற்றவனென் பதும் தேறும். (3) அத்யந்தம் ஆசு:—ஆசிஷ்ட: என்பது மூன்ருவது பொருள். காரியங்களினுல் அலஸனு யிருக்கையன்றிக்கே சுருசுருப்போடு செய்பவனென்கை. இதற்குமேல் [த்ரடிஷ்டோ பலிஷ்ட:] மனேபலமும் தேஹபலமு முடையனுயிருக்கை. அவ்யவஸ்தித சித்தனுயிருக்கையன்றிக்கே ஒருவராலும் சலிப்பிக்க வொண்ணுத திடமான அத்யவஸாயமுடையனு யிருக்கையே மனேபலம். நாஸ்திகன் நாஸ்தி கத்வத்தில் பிடிவாதமாயிருக்கை முதலான விபரீத மனவுறுதிகளை இதற்கு அர்த்த மாகக் கொள்ளலாகாது. இதற்குமேல் [தஸ்யேயம் ப்ருதிவீ ஸர்வா வித்தஸ்ய பூர்ணு ஸ்யாத்] என்று செல்வச்சிறப்புடைமை சொல்லுகிறது பூமண்டலம் முழுவதும் தனத்தால் நிறைந்து அவனுடைய ஸொத்தாயிருக்கை. ஆக இவ்வளவும் வாய்த்

தால் ஒருவகையான மனுஷ்யானந்தமென்றது. இதில் கடைசியாகச் சொன்ன செல்வச் சிறப்பில் மட்டும் அதிவாதமுள்ளதே யன்றி மற்றவை பெரும்பாலும் ஸம்பாவிதமான ஆனந்தமே. இப்படிப்பட்ட ஆனந்தங்களைக் கருதியே ஆழ்வார் "உலகிலெண்ணிலாத பேரின்பமுற்று" என்றருளிச் செய்தாரென்னலாம். ... *

— பராங்குச முனிக்கும் பரகால முனிக்கும் உள்ள சேர்த்தி —

222. மணவாள மாமுனிகள் "மாறன் பணித்த தமிழ் மலைக்கு மங்கையர் கோன் ஆறங்கம் கூற" என்றருளிச்செய்த அங்காங்கி பாவத்தை எளிதாகத் தெரிந்துகொள்ள முடியவில்லையே யென்று திகைப்பர் பலர். நம்மாழ்வாருடைய திவ்யப் பிரபந்தங்களிற் சுருக்கமாகக் காணப்படுகின்ற விலக்ஷண அநுபவ ப்ரகாரங்களைத் திருமங்கையாழ்வார் தம்முடைய திவ்யப் பிரபந்தங்களில் விஸ்தரித்து வெளியிட்டிருக்கையாலே இத்தைப்பற்ற அங்காங்கிபாவம் நிர்வஹிக்கப்படுகிறது. இதில் முக்கியமான நிருபணம் கேளீர். * அநாதிநிதநா ஹ்யேஷா வாக் உத்ஸ்ருஷ்டா ஸவயம்புவா * என்கிறபடியே ஸம்ஸ்க்ருத வேதத்திற்கு ப்ரவர்த்தகனான பிரமன் நான்முகனாயிருப்பதுபோலத் தமிழ் வேதத்திற்கு ப்ரவர்த்தகரான நம்மாழ்வாரும் நான்கு முகங்களையுடையராயிருப்பர். எங்ஙனேயென்னில்; ஆழ்வார் தம்முடைய திருவாக்கினாலே பேசுவது மகள் பேச்சாலே பேசுவது, தாய்பேச்சாலே பேசுவது தோழி பேச்சாலே பேசுவது—என நான்கு ப்ரக்ரியைகளை நம்மாழ்வார் ஸ்ரீஸூக்திகளிலே காண்கிறோம். ஆழ்வார் ஆண்மை குலையாமல் குருகூர்ச் சடகோபனாகவேயிருந்து பேசுவது தம்முடைய திருவாக்கினாலே பேசினபடியாம். * அஞ்சிறையமடநாரை முதலான நான்கு பதிகங்களில் தூதுவிட்டதும், * வாயுந் திரையுகளும் முதலாக * வேய்மரு தோளிணையளவாகப் பதின்மூன்று பதிகங்களில் தம்முடைய கிலேசங்களை வெளியிட்டதும் மகள் பேச்சாலே பேசினபடியாம். * ஆடியாடியகங்கரைந்து முதல் * கங்குலும் பகலும் கண்டுயிலறியாளளவும் ஏழுபதிகங்களில் 'என் மகள் வாடுகிறாள், மெலிகிறாள், பித்தேறிக்கிடக்கிறாள்' என்றாப்போலே சொன்னவை தாய் பேச்சாலே பேசினபடியாம். * தீர்ப்பாரையாமினி * துவளில் மாமணிமாடமோங்கு * கருமாணிக்கமலை * என்கிற மூன்று பதிகங்களில் (ஆழ்வாருடைய) அநந்யார்ஹத்வம் விளங்கும்படி பேசினவை தோழி வாக்காலே பேசினபடியாம். இப்படி நான்கு முகங்களாலே பேசினபடியாலே நம்மாழ்வாரை நான்முகராச் சொன்னது பொருந்தும். இங்ஙனே திருமங்கையாழ்வாரும் நான்முகராவர். இவரும் தாமான தன்மையிலே பல நூறு பாசுரங்கள் பேசினார். மகள் பேச்சாகப் பதினைந்து பதிகங்களுக்குமேல் பேசினார். தாய் பேச்சாக எட்டுப் பதிகங்கள் பேசினார். தோழி பேச்சாகப் பேசின பதிகம் இல்லையாயினும் தோழியோடு ஸம்வாதம் நடப்பதாக வைத்துப் பேசியிருப்பதனால் தோழி பாசுரம் அந்தர்வாஹினியென்று கொள்ளக் குறையில்லை. எம்பெருமானுடைய ஸ்வாமித்வத்திற்கு எதிராக நம்மிடம் ஸ்வத்வமிருப்பது போலவும், அவனுடைய சேஷித்வத்திற்கு எதிராக நம்மிடம் சேஷத்வமிருப்பது போலவும், அவனுடைய ஆத்மத்வத்திற்கு எதிராக நம்மிடம் சரீரத்வமிருப்பது போலவும், அவனுடைய புருஷோத்தமத்வத்திற்கு எதிராக நம்மிடத்தில் ஸ்த்ரீத்வமிருக்க ப்ராப்தமாகையாலே ஆழ்வார்க்குப் பெண்மை இயற்கையேயொழிய வந்தேறியன்று. ஆசார்ய ஹ்ருதயத்தில் "வித்யை தாயாகப் பெற்று" இத்யாதி சூர்ணையில் இது மிகவற்புதமாக விவரிக்கப்பட்டுள்ளது. ... ... ... ... ... *

— பரமபுருஷார்த்த ப்ராவண்யம் —

**223.** நம்மாழ்வார் திருவாய்மொழியில் நான்காம் பதிகத்தில் தூதுவிடத் தொடங்கும்போதே "முன் செய்த முழுவினையால் திருவடிக்கீழ்க்குற்றேவல் முன் செய்ய முயலாதேன் அகல்வதுவோ விதியினமே" என்றார். 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா வடிமை செய்யவேண்டும் நாம்' என்ற கைங்கரியத்தை *உற்றேனுகந்து பணிசெய்து உனபாதம் பெற்றேன்* என்றே நிகமனம்செய்தார். பெரியாழ்வார். * திருப்பல்லாண்டில் * நியதமுமத்தாணிச் சேவகமும் . தந்து என்னை வெள்ளுயிராக்கவல்ல * என்றருளிச்செய்து, அடுத்த திவ்யப்ரபந்தத்தின் முடிவில் 'உனக்குப் பணிசெய்திருக்குந் தவமுடையேன்' என்றார். ஆண்டாளும் திருப்பாபாவையில் 'குற்றேவ லெங்களைக் கொள்ளாமற் போகாது—உனக்கே நாமாட் செய்வோம்' என்றாள், தனது திருமொழியிலும் "கேசவ நம்பியைக் கால் பிடிப்பாள் என்னுமிப்பேறெனக் கருள்கண்டாய்* என்றும், *பள்ளிகொள்ளுமிடத்து அடிகொட்டிடக் கொள்ளுமாகில் நீ கூடிடுகூடலே" என்று மருளிச்செய்தாள். இவற்றை அடியொற்றி ஆளவந்தார் "கதா அஹம் ஐகாந்திக நித்ய கிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி" என்றார். எம்பெருமானார் சரணாகதி கத்யத்தில் பிரார்த்தித்தது 'நித்ய கிங்கரோ பவாநி' என்று. அரங்கனிடம் அருள் பெற்றதும் நித்ய கிங்கரோ பவ' என்றே. ... ... ... ... ... *

— என்றும் அணையாத விளக்குகள் கேளீர் —

**224.** ஆழ்வார்களின் திவ்யஸூக்திகளில் எம்பெருமான் பலவிடங்களில் விளக்காகக் கூறப்பட்டான். *வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்கு* ஆயர் குலத்தினில் தோன்று மணிவிளக்கு * ஆயர்பாடிக்கணிவிளக்கு * இத்யாதிகள் விபவாவதாரங்களைப் பற்றவும், *வேடார் திருவேங்கடம் மேய விளக்கே *முனியே திருமூழிக்களத்துவிளக்கே* இத்யாதிகள் அர்ச்சாவதாரத்தைப் பற்றவும், வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்தவிளக்கு* மிக்க ஞானமூர்த்தியாய வேதவிளக்கு* இத்யாதிகள் பொதுவான நிலைமையைப் பற்றவும் அவதரித்துள்ள பாசுரங்கள். உலகில் விளக்கின் தன்மையை நாம் எவ்வண்ணமாகத் தெரிந்துகொண்டிருக்கிறோமென்றால் தீபம் ஸ்வபரப்ரகாசகம் என்று தெரிந்துகொண்டிருக்கிறோம். எவரும் விளக்கைப் பார்ப்பதற்கு இன்னொரு விளக்கு வேண்டாதபடி தன்னைத் தானே காட்டிக் கொடுக்கையாலே ஸ்வப்ரகாசகத்வமென்பது தேறிற்று. விளக்கு இல்லாதபோது காணமுடியாத பொருள்களையெல்லாம் விளக்கு தான் காட்டிக்கொடுக்கையாலே பரப்ரகாசகத்வமும் தேறிற்று. லௌகிகமான விளக்கு சிறிதாகையாலே அதினுடைய பரப்ரகாசகத்வம் ஸங்குசிதமாயிருக்கும். எம்பெருமானாகிற விளக்கு ஸர்வ வ்யாபகமாகையாலே எங்குமுள்ள எல்லாப் பொருள்களையும் எப்போதும் பிரகாசிப்பித்துக்கொண்டிருக்கும். லௌகிகமான விளக்கு குருடர் முதலானோர்க்கு எதையும் ப்ரகாசப்படுத்தமாட்டாததுபோல எம்பெருமானாகிற விளக்கும் பக்திஸித்தாஞ்ஜந பூஷிதமான அகக்கண் இல்லாதார்க்கு எதையும் ப்ரகாசப்படுத்தமாட்டாமலிருப்பதில் வியப்பில்லை. விளக்காக எம்பெருமானை யநுஸந்திப்பவர்களுக்கு அவன் தன்னையுங்காட்டிக் கொடுத்துத் தன்னுடைய விபூதிகளையுமெல்லாம் விசததம

மாகக் காட்டிக்கொடுக்கையாலும், இந்த விளக்கு ஒருநாளும் அணையாததாகையாலும் ஆழ்வார் நந்தாவிளக்கென்றது மிகப்பொருத்தம். பரவ்யூஹவிபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரங்களாகிற பஞ்ச ப்ரகாரங்களையும் எம்பெருமான் நன்கு ஸாக்ஷாத்கரிப்பிக்க, கண்டேன் கண்டேனென்று சொல்லி ஸாக்ஷாத்கரித்தவர்கள் நம் ஆழ்வார்கள். ஆசார்ய ஹ்ருதயத்தில் "முந்நீர் வாழ்ந்தார் சூட்டுங் கோவை ஆழ்யென்கிற ஸாக்ஷாத் க்ருத ஸ்வபர வ்ருத்தாந்தர்க்கு" என்றருளிச் செய்ததை இங்கே அநுஸந்திப்பது. இந்த சூர்ணையில் *சூட்டும் என்றெடுத்த சந்தையின் பொருளைமட்டும் இங்கு விவரிக்கின்றேன். (திருவிருத்தம். பா. 21) *சூட்டுநன் மாலைகள் தூயனவேந்தி, விண்ணோர்கள் நன்னீராட்டி அந்தூபந்தரா நிற்கவேயங்கு, ஓர் மாயையினாலீட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப் போந்து இமிலேற்றுவன் கூன் கோட்டிடை யாடினை கூத்து, அடலாயர்தங் கொம்பினுக்கே* நித்யஸூரிகளும் முக்தாத்துமாக்களும் பரமபதநாதனுக்குத் திருவாராதன உபகரணங்களை ஏந்திக்கொண்டு ஆராதிக்க ஆரம்பித்து தூபம் ஸமர்ப்பிக்கின்றபோது புகையினால் திருமுக மண்டலம் மறையும்; பிறகு தீபம் ஸமர்ப்பிக்கும்போது திருமுக மண்டலம் விளங்கும். இந்த தூப தீபங்களினிடையே எம்பெருமான் திருவாய்ப்பாடிக்கெழுந்தருளி நவநீத சௌர்யாதிகளையும் *நீளாதுங்க ஸ்தந கிரி தடீஸுப்திமுதலானவைகளையும் முடித்துக்கொண்டு சென்று நின்று அந்த நித்ய முக்தர்களுக்குக் காட்சி தரும்படி சொல்லிற்று. இது உத்ப்ரேக்ஷை யன்று உல்லேகமன்று; *கமலக்கண்ணனென் கண்ணினுள்ளான் காண்பனவன் கண்களாலே* என்கிறபடியே அவன் தந்த கண்ணாலே கண்டு பேசினதாயிற்று. காணமுடியாதவற்றையும் காட்டிக்கொடுக்குந்தன்மை தனக்குண்டென்பதை எம்பெருமான் (கீதையில்) அர்ஜுநனை நோக்கி *திவ்யம் ததாமி தே சக்ஷு:* என்று தான் சொல்லியும் *பச்யாமி தேவாந் தவ தேவ! தேஹே* என்று அவனைக்கொண்டு சொல்லுவித்தும் மூதலித்தாயிற்று. ஆக ஸ்வப்ரகாசகத்வமும் பரப்ரகாசகத்வமும் வடிவான விளக்கின் தன்மையை நந்தாவிளக்கான எம்பெருமான் பக்கலிலே கண்டோம். *

## — விளக்கைக்காண விளக்கு வேண்டியிருக்குமதிசயம் —

225. விளக்கைக் காண்பதற்கு விளக்கு வேண்டாவென்றேன்; நந்தாவிளக்கைக் காண்பதற்கு இன்னொரு விளக்கு வேண்டி யிருக்கையாகிற வைதர்ம்யத்தையும் காணா நின்றோம். இந்த விளக்கைக் காணவன்றோ *ஞானச்சுடர் விளக்கேற்றினேன்* உய்த்துணர்வென்னு மொளிகொள் விளக்கேற்றி வைத்து அவனை நாடி* என்று பூதத்தாரும் பேயாரும் பேசினார்கள். அந்த ஞான விளக்குக்கும் மூலமாக மானவிளக்கென்று ஒன்றுண்டு; அதை பட்டர் அருளிச்செய்தார் *மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி* என்று. மாநமாவது ப்ரமாணம்; *ஆதௌ வேதா: ப்ரமாணம்* என்று மூலப்ரமாணமாகச் சொல்லப்பட்ட வேதமே முதல் விளக்கு; அதிலிருந்து ஞானச்சுடர் விளக்கையேற்றி நந்தாவிளக்கைக் காணவேணும். ... *

## — இடையில் அடியேனுடைய அநுபவமொன்று —

226. அடியேன் முதன் முதலாக மலைநாட்டுத் திருப்பதி யாத்திரை விடைகொண்டபோது திருக்காட்கரையிலிருந்து திருமூழிக்களம் நடந்து செல்லுகின்றேன்,

சிலர் உடன் வருகிறார்கள். வரப்புப் பாதையில் நாங்கள் செல்லவேண்டியிருந்தது; "ஒளியவன் விசும்பியங்கும் தேரும் போயிற்றுத் திசைகளும் மறைந்தன" என்னும் படியான ஸமயம், திக்குத் தெரியவில்லை ஒன்றும் தெரியவில்லை. ஜனஸஞ்சாரமுமில்லை; வந்த வழியே திரும்பிப் போகவும் முடியவில்லை. திகைத்து நிற்கையில் வயலுக்குள்ளே வார்த்தையொலி கேட்டது; எம்பெருமான் யாரையோ காட்டிக் கொடுக்கிறானென்று மகிழ்ந்து 'யாரப்பா! வழிதெரியவில்லையே, ஒன்றும் தெரிய வில்லையே, கொஞ்சம் அருகே வா அப்பா!' என்றேன். மலையாளியான அவன் எப்படியோ பாஷை புரிந்துகொண்டு, அங்குத் தான் கீழே வைத்திருந்த லாந்தல் விளக்கை யெடுத்துத் தூக்கிக்காட்டி வாருங்கள் என்றான். உடனே எனக்கு 'மூழியே திருமூழிக்களத்து விளக்கே' என்ற திருமங்கையாழ்வார் பாசுரம் நினைவுக்கு வந்திட்டது. இது லாந்தல் விளக்கன்று, திருமூழிக்களத்து விளக்கு என்று சொல்லிக் கூத்தாடுகிறேன். கூடவந்தவர்களில் இருந்த நால்வர் அத்யாபகர்கள். அவர்கள் சொன்னார்கள் — திருமங்கையாழ்வாரும் இப்படியே இருட்டில் வந்து திகைத்து விளக்கு காட்டக்கண்டே * மூழிக்களத்து விளக்கே! என்றும் * மூழிக் களத்து விளக்கினை யென்றும் ஸாதித்தார் போலும் என்று. திருநெடுந் தாண்டகத்திலும் * திருமூழிக்களத்தானாய்! என்பதற்கு முன்னே *பின்னானார் வணங்குஞ் சோதி என்றதும் விளக்கின் சோதியையே போலும். ஸ்ரீவசனபூஷணத்தில் "ப்ரபத்திக்கு அபேக்ஷிதங்களான ஸௌலப்யாதிகள் இருட்டறையில் விளக்குப் போலே ப்ரகாசிப்பது இங்கே" என்றருளிச் செய்தது அன்று திருமூழிக்களத்தில் உபந்யஸிக்கலாயிற்று. ... .... ... ... ... *

## — எண்ணிலாத பேரின்பம் உலகிலுமுண்டு —

**227.** பெரியதிருமொழியில் (4-2) * கம்பமாகடலடைத்து * என்கிற வண் புருடோத்தமப்பதிகத்தில் பலன்கூறும் நிகமனப்பாசுரத்தில் * இப்பத்தும் வல்லார், உலகிலெண்ணிலாத பேரின்ப முற்று இமையவரோடுங் கூடுவரே * என்று பல கீர்த்தனம் காண்கிறது. மண்ணுலகிலுள்ள தெல்லாம் சிற்றின்பமென்றும் * முகில் வண்ண வானத்திமையவர் சூழவிருப்பர் பேரின்பவெள்ளத்தே * என்ற திருவாய் மொழியின்படி விண்ணுலகில் தான் பேரின்பவெள்ளமென்றும் நினைத்திருப்பதும் சொல்லிப்போருவது முண்டு. * சிந்தை மற்றொன்றின் திறத்த தல்லாத்தன்மை தேவபிரானறியும் * இச்சுவை தவிர யான்போய் இந்திரலோகமாளும் அச்சுவை பெறினும் வேண்டேன் * என்னமுதினைக்கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே * என்னு மருளிச்செயல்களினால் நலமந்தமில்லதோர் நாடாகிய பரம பதத்தையும் த்ருணீகரித்திருக்குமவர்கள் இவ்வுலகில்தான் எண்ணிலாத பேரின்ப முறுவர்களென்னத் தட்டுண்டோ? எண்ணிலாத என்பதற்கு 'அஸங்க்யேயமான' என்கிற பொருள் தவிர, 'அவரவர்கள் தாம் எண்ணாத' என்கிற பொருளும் பொருந்துமாதலால் நம்முடைய சிந்தைக்கும் கோசரமல்லாத பேரின்பங்களை நாம் இந்நிலத்தில் அனுபவித்து வருகிறோமென்பதை உற்று நோக்கவேணும். .... *

## — ஸ்ரீமந்நாதமுனிகளின் பெருமை விருந்துகள் ஐந்து —

228. (1) வீரநாராயணபுரமென்கிற காட்டுமன்னுர் ஸன்னிதியில் சொட்டக் குலத்திலவதரித்தார் நாதமுனிகள். *லக்ஷ்மீ நாதஸமாரம்பாம் நாதயாமுநமத்ய மாம்* என்றும் *நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம் பஹுபிருபசிதம் யாமுநேயப்ரபந்தைஃ த்ராதம் ஸம்யக் யதீந்த்ரைரிதம் அகில தமஃகர்சநம்தர்சநம்* என்றும் சொல்லுகிற படியே நாதமுனிகள் தொடங்கியே நம்முடைய ஸ்ரீவைஷ்ணவ தர்சநம் ப்ரவ்ருத்த மாயிற்று. அடிகாணவியலாத இந்த ஸம்ஸாரமண்டலத்தில் ஸ்ரீமந்நாதமுனி களுக்கு முன்பு ஸ்ரீவைஷ்ணவர்களும் ஸ்ரீவைஷ்ணவ தர்சனமும் இருந்ததில்லை யென்று கருதலாகாது; ஸூரியசந்திரர்களுண்டானகாலம் முதலாகவே இவையு முண்டுதான். ஆனல் நாமறியப்பெற்றது நாதமுனிகள் தொடங்கியே யாதலால் *நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம்* என்று பணித்தார் நிகமாந்த மஹாகுரு. *அருள் பெற்ற நாதமுனி முதலாம் நந்தேசிகரையல்லால் பேதை மனமேயுண்டோ பேசு* என்று மணவாள மாமுனிகளருளிச்செய்தனர்.

229. (2) இவர் வீரநாராயணபுரமென்கிற காட்டுமன்னுர் ஸன்னிதியில் ஆனிமாதம் அநுராதா நக்ஷத்திரத்தில் ஈச்வர முநிகளுக்குத் திருக்குமாரராய்த் திருவவதரித்து, காலங்களில் சௌளம் உபநயநம்முதலிய ஸம்ஸ்காரங்களைப்பெற்று வேத வேதாந்தங்களையும் ஸாமாந்ய சாஸ்த்ர அத்யாத்ம சாஸ்த்ரங்களையும் அதிக ரித்து மஹாவித்வானுக எழுந்தருளியிருந்தார். இவருடைய திருக்குமாரர் திருநாமம் ஈச்வரபட்டாழ்வான். அவருடைய திருக்குமாரரே யமுனைத்துறைவர்—யாமுநா சார்யர் என்கிற ஆளவந்தார். ஸ்ரீமந்நாதமுனிகள் தம் இருப்பிடந்தன்னில் மன்னனுரென்கிற எம்பெருமானுக்கு ஸகலவிதமான கைங்கரியங்களையும் செய்து கொண்டு வாழ்ந்தருளுங்காலத்தில் அவ்விடத்திற்குத் திருநாராயணபுர ப்ராந்தத் தில் நின்றும் சில ஸ்ரீவைஷ்ணவர்கள் வந்து மன்னனுர் ஸன்னிதியில் தங்களுக்குத் தெரிந்த ஸ்தோத்ரங்களை யெல்லாம் அநுஸந்தித்துக்கொண்டிருக்கையில் நம்மாழ் வாரருளிச்செய்த திருவாய்மொழியில் *ஆராவமுதே அடியேனுடலம்* என்கிற பதிகத்தையும் செவிக்கினிய இசையுடனே அநுஸந்தித்தார்கள். அதில் முடிவு பாசுரத்தில் *குழலில் மலியச்சொன்ன ஓராயிரத்துளிப் பத்தும்* என்று அவர்கள் அநுஸந்தித்ததைக் கேட்ட நாதமுனிகள், இப்படி ஆயிரம் பாசுரங்கள் அவதரித் திருப்பதாகத் தெரிந்ததனுல் அந்த ஸ்ரீவைஷ்ணவர்களை நோக்கி 'ஸ்வாமிகாள்! உங்களுக்கு ஆயிரம் பாசுரமும் முகபாடமாக வருமோ?' என்று கேட்டார். அவர்கள் இப்பத்துப் பாசுரந்தவிர வேறொரு பாசுரமும் அறியோம், என்று சொல்லிப் போனுர்கள்.

230. (3) அதுமுதலாக நாதமுனிகளுக்கு இரவும் பகலும் இதுவே சிந்தை யாயிற்று; "குருகூர்ச் சடகோபன் சொன்ன ஆயிரம்" என்று செவிப்பட்டபடியாலே அந்த சடகோபர் [நம்மாழ்வார்] திருவவதரித்த குருகூரிலே சென்று விசாரித்தோ மாகில் அங்கே கிடைக்கக் கூடுமென்று கருதி எம்பெருமானிடம் விடைபெற்று ஆழ்வார் திருநகரிக்கு எழுந்தருளி பொலிந்துநின்ற பிரானையும் நம்மாழ்வாரையும்

ஸேவித்து நிற்கையில், ஸ்ரீ மதுரகவிகளின் சிஷ்ய பரம்பரையிலே ஒருவரான ஸ்ரீ பராங்குசதாஸரென்பவர் நேர்பட, அவரைத் தெண்டனிட்டுத் தாம் எழுந்தருளின கார்யத்தை விண்ணப்பஞ்செய்து "இவ்விடத்தில் ஆயிரமும் தெரிந்தவர்களுண்டோ? ஸ்ரீகோசமாவது உண்டோ?" என்று கேட்க, அதற்கு அவர் சொன்னதாவது:—"திருவாய்மொழியும் மற்றுமுண்டான திவ்யப்ரபந்தங்களும் பிரசாரமின்றி மறைத்து நெடுநாளாய்விட்டது; ஆனாலும் எங்கள் குலக்கொழுந்தான ஸ்ரீ மதுரகவிகள் அருளிச்செய்த கண்ணிநுண் சிறுத்தாம்பு என்னும் பிரபந்தமுண்டு; அதனைத் திருப்புளியாழ்வார் திருமுன்பே ஆழ்வார் திருவடிகளைச் சிந்தித்துக்கொண்டு நியமத்துடனே பன்னீராயிரம்விசை ஜபித்தால் ஆழ்வார் அருள்புரியக்கூடுமென்று கேட்டிருந்ததுண்டு" என்றார்.

231. (4) அதுகேட்ட நாதமுனிகள் திருவுள்ளம்தேறி ஆனந்தக்கடலிலே மூழ்கின மனத்தராய் அவரைத் திருவடிதொழுது "ஸ்வாமிந்! அந்தக் கண்ணிநுண் சிறுத்தாம்பு பிரபந்தத்தை அடியேனுக்கு அநுக்ரஹித்தருள வேணும்" என்று விநயமுடன் வேண்ட, அவரும் திருவுள்ளமுவந்து இவர்க்கு அந்தப்பிரபந்தத்தைப் பாடம்செய்வித்தார். இவரும் அதிகரித்துத் திருப்புளியாழ்வாரடியிலே நியமத்துடன் பன்னீராயிரம் முறை அந்தப் பிரபந்தத்தை யநுஸந்தித்துத் தலைக்கட்டினவாறே இவரது ஆர்த்திக்கு இரங்கின நம்மாழ்வார் திவ்யதிந்த்ரிணீவ்ருக்ஷத்தின் சாகையொன்றில் பத்மாஸநோபவிஷ்டராய் அசரீரிவாணி சொல்லுவதுபோல "உமது அபிமதம் இன்னதென்று தெரிவிக்கவேணும்" என்று சொல்ல, நாதமுனிகள் ஆனந்தக்கண்ணீர் பெருக நின்று கூப்பிய கையராய் "ஸ்வாமிந், திருவாய்மொழி முதலிய திவ்யப்ரபந்தங்களை அடியேனுக்கு ப்ரஸாதித்தருளவேணும்" என்று விண்ணப்பஞ்செய்ய, ஆழ்வாரும் பரமப்ரீதராய் அவர்க்கு திவ்யமான ஞானக்கண்ணைக் கொடுத்து ரஹஸ்யத்ரயத்தையும் நாலாயிர திவ்யப் பிரபந்தங்களையும் தர்சனத்தின் ஆழ்பொருள்களையும் அஷ்டாங்க ரஹஸ்யத்தையும் யோகதசையிலே ப்ரஸாதித்தருளி அந்தர்த்தானமாயினர்.

232. (5) "வ்யோம்ந: பரஸ்தாத் ஸவிதம் ஸமேத்ய லக்ஷ்ம்யா நியோகாந் குருகாதிராஜ:, மைந்த்ரராஜத்வயமாஹ யஸ்மை நாதாய தஸ்மை முநயே நமோஸ்து" என்கிற தனியன் நமக்கு நித்யாநுஸந்தேயம். இப்படி நம்மாழ்வார் பக்கலிலே ஸர்வஸ்வமும் லபிக்கப்பெற்ற நாதமுனிகள் சிலகாலம் திருநகரியிலேயே வஸித்திருந்து அங்குள்ளார்க்கு அருளிச்செயல்களை ப்ரவசனம் செய்தருளி, பிறகு ஸ்வதேசத்திற்கு மீண்டெழுந்தருளி அந்த திவ்யப்ரபந்தங்களை சாகோபசாகமாக ப்ரவர்த்திப்பித்தருளினர். வடமொழி வேதத்திற்கு வேதவ்யாஸர்போலே தமிழ் மறைக்கு நாதமுனிகளென்று ப்ரஸித்தமாயிற்று. ... ... ... ❁

**இடையில் விஜ்ஞாபனம்:**— இதிஹாஸ புராணுதிகளிலும் ஆழ்வாராசார்ய ஸ்ரீ ஸூக்தி முதலானவற்றிலும்போல வேதத்திலும் நாம் பலவித விமர்சங்களைச் செய்கிறேமல்லவா? சென்ற ராமாநுஜ னிதழில் (269ல்) பக்கம் 14ல் வேதஸ்வரங்களில சில ஆராய்ச்சிகள் என மகுடமிட்டு நாமெழுதி யிருப்பதைக் கண்ட மஹான்கள் அது தொடர்ந்து வெளிவர வேண்டுமென்று ஆசம்ஸிப்பதால் இவ்வரிய பெரிய அறுநூறு விருந்துகளில் இதையும் சேர்த்துக்கொண்டு நிகழும் மூன்ருவது நூறின் சேஷத்தை வேதஸ்வர விமர்சமாகவே தலைக் கட்டுகிறேம். இப்பகுதிக்கு ஸ்வர பேதக்கண்ணுடி யென்று பெயரிடு கிறேம். முன்னிதழில் இந்த விமர்சத்திற்கு அவதாரிகை நாமெழுதி யிருப்பதைச் சுருக்கமாக இங்கு நினைவூட்டுகிறேம்.

வேதத்தில் லக்ஷக்கணக்கான பதங்கள் ஓதப்பட்டு வருகின்றன. இவற்றின் ஸ்வர ஸந்நிவேசம் ஒரே விதமாக இல்லை. ஒரே பதமானது ஸ்தல பேதத்தினுல் வெவ்வேறு விதமான ஸ்வரத்தோடு கூடியதாக ஓதப்படா நின்றது. இந்த ஸ்வரபேதம் எல்லாப் பதங்களிலுமில்லை; அனேக பதங்களில் காண்கிறேம். அத்தகைய பேதம் ஏதனுல்? என்று விமர்சிக்கவேணும். இங்குச் சிலர் கருதுவதென்னவென்ருல், ஸ்வதந்த்ரமான வேதத்தில் இதைப் பற்றி விமர்சனம் செய்வதற்கு நமக்கென்ன அதிகாரம்? ஸ்வதந்திரனுன வேத புருஷன் தன்னிஷ்டப் படி ஸ்வரங்களை அமைத்திருக்க, அதற்குக் காரண விமர்சம் செய்ய முடியாது என்று; இத்தகைய கருத்துக் கொண்டவர்கள் சிலர் மட்டு மல்ல; பெரும்பான்மையானவர்கள் என்னலாம். இக்கருத்து யுக்த மல்ல. இங்கு நம்முடைய விமர்சத்தை வைதிக வித்வான்களின் முன் னிலையில் ஸமர்ப்பிக்கிறேம். அவர்கள் குணதோஷங்களை விமர்சிக்கக் கடவர்கள். நிமித்த விசேஷமில்லாமல் ஸ்வரபேதமுண்டாகாதென் பது நமது கொள்கை. அதையே அவிசால்யமாக நிலைநாட்டுகிறேம்.

## — ஸ்வரபேதக் கண்ணுடி —

233 (ஊவ-அவ) என்கிற பதத்தைப்பற்றியும் (ஊவ॰-அவ॑) என்கிற பதத்தைப் பற்றியும் எனது ஆராய்ச்சியை முன்னம் தெரிவிக்கிறேன் கேண்மின். (அவ) என்கிற பதத்தைப்பற்றி முந்துற முன்னம் தெரிவிக்கிறேன். இதில் இருவகை யான ஸ்வர பேதமும் மூவகையான நிமித்த பேதமும் தெரிந்துகொள்ளவேணும். (1) முதலெழுத்து உதாத்தமாயும் இரண்டாமெழுத்து ஸ்வரிதமாயுமிருப்பது ஒரு விதம். (2) இரண்டெழுத்தும் அநுதாத்தமாயிருப்பது மற்றொருவிதம். (இவற்றை முறையே அந்த்யஸ்வரிதம் (அல்லது) ஆத்யுதாத்தமென்றும்,ஸர்வாநுதாத்தமென்

அ–15

றும் வைதிகர் வழங்குவர்.) இவ்விரண்டு வகையான ஸ்வரபேதத்தில் நிமித்த பேதம் மூன்று என்றதை விவரிக்கக் கேண்மின். அவஈசெ, அவமவதி, அவஷ்தி' அமெவதி) என்றிப்படிப்பட்ட பல நூறிடங்களில் உபஸர்க்கமாகிய (அவ) என்கிற பதம் எங்கும் நியமேந அந்த்யஸ்வரிதமாயேயிருக்கும். (ஆத்யுதாத்தமாகவே யிருக்குமென்றபடி.) இஃது ஓரிடத்திலும் பிறழாது. இதற்குப் பல நூற்றுக் கணக்கான இடங்கள் லக்ஷ்யமாகும். அங்கெல்லாம் திஙந்தபதமொன்று தனியே அவசியமிருக்கும். இந்த உபஸர்க்கம் திஙந்த பதத்தோடு ஸமாஸமடைந்தால் அப்போது நியமேந ஸ்வரம் பேதிக்குமென்பது வேறு விஷயம். தனிப்பதத்தைப் பற்றியே இங்கு நாம் தெரிவிப்பது. மூவகை நிமித்த மென்றதில் [உபஸர்க்க த்வ ரூபமான] ஒரு நிமித்தம் தெரிவித்தாயிற்று. உபஸர்க்க ரூபமான (அவ) என்கிற பதம் நியமேந ஆத்யுதாத்தமாகவேயிருக்குமென்றதாயிற்று.

234. இனி இரண்டாவது நிமித்தம் கேளீர். (அவ—ரக்ஷணே) என்கிற தாதுவில் லோண்மத்யமைகவசன ரூபம் (அவ) என்பது. திஙந்த பதங்களுக்கு ஸர்வாநுதாத்தத்வம் ஔத்ஸர்க்கிகமாகையாலே ரக்ஷிக்கவேணுமென்கிற அர்த்தத்தில் (அவ) என்பது ஸர்வாநுதாத்தமாக வரும். *யஜ்ஞயஜ்ஞ ந உவ* (3—1—36) *யத்ராஹமஸ்மி தாஂ அவ* (2—6—64) அதூஷாடிவ ஷிவொ வ்ருஷிஜ்ஞாய* (4-3-9) என்னுமிந்த மூன்றிடங்களில் (அவ) என்பதற்கு ரக்ஷிக்கவேணுமென்பதே அர்த்தமாதலால் (அது) ஸர்வாநுதாத்தமாயிற்று. (யத்ராஹமஸ்மி தாஂ அவ) என்கிற வாக்கியம் த்விதீய காண்ட ஷஷ்டப்ரச்நத்தில் 64 ஆம் பஞ்சாதியில் வருவது போலவே, சதுர்த்தகாண்ட ப்ரதமப்ரச்நத்தில் 37 ஆம் பஞ்சாதியிலும் மாறு படாமல் வருகையாலே அதையுங்கூட்டி நான்கு இடங்களென்னலாம். இவை தவிர ஸர்வாநுதாத்தமாக வருமிடம் (அவ என்பதற்கு) வேறு கிடையாது.

235. மூன்று நிமித்தங்களென்றதில் இரண்டு நிமித்தங்களை நிரூபித்தாயிற்று: இனி மூன்ருவது நிமித்தம் கேண்மின். ரக்ஷணர்த்தகமான அவ தாதுவின் லோண்மத்யமைகவசன ரூபமாகக் கீழே விவரிக்கப்பட்ட (அவ) என்கிற திஙந்த பதமே ஔத்ஸர்க்கிகமான ஸர்வாநுதாத்தத்வத்தைவிட்டு நிமித்தவிசேஷத்தினுல் ஆத்யுதாத்தமாகிறது. நாலாவது காண்டம் முதல் ப்ரச்நத்தில் *ஸம் தேவாயுரநுவாகத்தில் *உதிஷ்ட ஸ்வத்வராவநோ தேவ்யா க்ருபா* என்கிற ஓரிடம் மட்டும் இதற்கு லக்ஷ்யம் இங்கு (அவ) என்பது (ரக்ஷ என்னுமர்த்தத்திலேயே) ஆத்யுதாத்தமா யிருக்கிறது. இதற்கு நிமித்தமேதென்னில் வாக்யாதித்வம். (உதிஷ்ட ஸ்வத்வர) என்பது ஒரு வாக்யம். (அவாநோதேவ்யாக்ருபா) என்பது மற்ருெரு வாக்யம். ஸ்வத்வர! (ஸ்வத்வர!) என்று யஜ்ஞபுருஷனை ஸம்போதித்து (உத்திஷ்ட) எழுந்திரு என்கிற ப்ரார்த்தனையும் எங்களை க்ருபையோடு ரக்ஷிக்க வேணுமென்கிற ப்ரார்த்தனையும் இரண்டு வாக்யங்களினுல் செய்யப்பட்டுள்ளது. வாக்யாதியிலோ பாதாதியிலோ ஸர்வாநுதாத்தம் தலைகாட்டமாட்டாதென்பது அவ்யபிசரிதமான நியம மென்பதை மறக்கவேண்டா. இந்த நியமத்திற்கு ஆயிரமிடங்கள் லக்ஷ்யமாகும்; ஆயிரமென்பது அத்யுக்தியன்று.

236. இங்கு ஒரு முக்கியமான நுட்பம் காட்டுகிறேன். ஸம்ஹிதையில் ஒ, ஸ, வி, சுவ, சுநா, சுஹி, உவ இத்யாதிகளான உபஸர்க்கங்கள் பதபாடத்தில் இதி என்பதைச் சேர்த்தே ஓதப்படும். அதாவது ஒேதி, ஸேதி, சுவெதி, சுநிதி, சுஹீதி, உவெதி, வீதி என்றே ஓதப்படுமென்கை. ப்ரக்ருதம் நாமெடுத்துக்கொண்ட (அவ) என்கிற பதம் இதியோடு சேர்த்து ஓதப்படுமிடங்கள் எவையெவை என்று பதமோதினவர்கள் பார்க்கவேணும். சுவரூஸெ, சுவமஹதி, சுவஷூதி ஐதூரஷியாய் திஜஹவடிஹஸஹிவ்ராஹ்ரதங்களான ஸ்தலங்களிலேயே (சுவெதி) என்றேதப்படுவது. கீழே நாம் நிமித்தவிசேஷங்களை நிருபித்துக் காட்டின நான்கிடங்களில் (சுவெதி) இல்லாமல் (சுவ) என்றே ஓதப்பட்டு வருவது கவனிக்கப்பட்டால் இங்கு நாம் எழுதியவை நெஞ்சில் நன்கு பதியும். இது வெகு பரிச்ரமப்பட்டு ஆழ்ந்து ஆராய்ந்து தெரிவிக்கப்பட்ட விஷயமென்றும், இது அபூர்வமான ஆராய்ச்சியென்றும் ப்ராமாணிகர்கள் உணரலாகும். ஆத்யுதாத்தமாயும் அந்த ஸ்வரிதமாயுமுள்ள (அவ) என்கிற பதம் ஸப்த காண்டத்திற்குள் (ஊதி) சேர்க்காமல் ஓதப்படுமிடம் (உஷாதிஷஹவரஹராவாநஃ) என்கிற ஒரே ஒரு இடந்தானுள்ளது என்பதைத் திடமாகத் தெரிவிக்கிறேனடியேன். இதே போல் ஸர்வாநுதாத்தமான சுவவஷம் கீழே நானெடுத்துக் காட்டின மூன்றிடங்கள் மட்டுமே யென்பதும் திண்ணம். இந்த நான்கிடங்களிலும் ரக்ஷிக்க வேணுமென்பதே பொருளாதலால் பதபாடத்தில் (இதி) சேர்க்கப்படவில்லை யென்பதையும் வைதிகர்கள் திடமாகக் கொள்ளவேணுமென்று விஜ்ஞாபித்து அடுத்த விஷயத்தில் செல்லுகிறேன்.

237. இனி (அவ:) என்கிற ஸவிஸமக பதத்தில் ஸ்வரபேதமும் நிமித்தபேதமும் நிருபிக்கப்படுகிறது. விஸர்க்கரஹிதமான (அவ) என்பது உபஸர்க்கமாயும் யாதுரூப விசேஷமாயும் வேதத்திற்போல லோகத்திலும் கண்டதுண்டே யாகிலும் (அவ:) என்று ஸவிஸமகமான பதம் லோகத்தில் கண்டதில்லை யென்பதை முன்னம் குறிக் கொள்ளவேண்டும். ஏன்? அவதாதுவில் லங்லகாரத்தில் ஊயூஜ புருஷனில் *நஊஜஃயொமெ* ஷொநூரெஷஜவ* என்கிற ஸூத்ரங்களைக் கொண்டு அவ: என்கிற ரூபஸத்பாவத்தையும் ஸாதிக்கமுடியாதோவென்னில், முடியும். வேதத்தில் வந்துள்ள அவ: என்கிற ஸவிஸமக பதம் அப்படிப்பட்டதன்று.

238. அவ: என்கிற பதம் ஆத்யுதாத்தமாயும் அந்த ஸ்வரிதமாயும் மூன்றிடங்களிலும், ஆதியில் அநுதாத்தமாய் அந்தத்தில் உதாத்தமாய் ஓரிடத்திலும் வருகிறது. லக்ஷ்யஸ்தலங்களை அடைவே காட்டுகிறேன். (2—1—64) *தூநூ க்ஷத்ரியாமஃ சுவ:* (2—5—71) ஐஜராவரூணயொரஹமஃ ஸஜராஜொரவ சூவூணெ* (3—2—45) *தாஹிஷெவாநாஜவொயக்ஷி* என்னுமிந்த மூவிடங்களிலும் (அவ:) *என்பது ஆத்யுதாத்தம். (4—6—35) *சூதா.நா தெ உநவஸாரஷ ஜாநாஜவொஷிவா* என்னுமோரிடத்தில் மட்டும் (அவ: என்பது ஆத்யநுதாத்தம்.

ஆத்யுதாத்தமாகக் காட்டின மூவிடங்களிலும் அவ: என்பதற்கு ரக்ஷணமென்பது பொருள். ஆத்யநுதாத்தமாகக் காட்டின ஓரிடத்தில் மட்டும் (அவ: என்பதற்கு) ரக்ஷகமென்று பொருள். இது பாஷ்யங்களைக் கொண்டு நாம் தெரிவிப்பது. ஆத்யநுதாத்தமாக வருவது மட்டும் நாலாவது காண்டத்திலாகையால், நாலாவது காண்டத்திற்கு பட்ட பாஸ்கர பாஷ்யம் லுப்தமாகையால் இவ்விடத்திற்கு மட்டும் ஸாயணபாஷ்ய மொன்றையே கொண்டோம்.

இடையில் ஒரு விஜ்ஞாபனம். பதங்களுக்கு ஸ்வரபேதமுள்ள விடங்களையும், அதற்கு நிமித்த பேதங்களையும் நாம் நிரூபித்து வருகிறோம். ஸ்வர பேதமுள்ள விடங்கள் காட்டியிருப்பதில் யாரும் வாய் திறக்கமுடியாது. அத்யயந பரம்பரையை யாரும் அபலபிக்க முடியாதாகையாலே. இனி நிமித்த பேதம் நாம் நிரூபித்திருக்குமிடங்களை யெடுத்துக் கொண்டு, அது நிமித்தமன்று, இது நிமித்த மன்று என்று க்ஷேபிக்கச் சிலர் எழுந்தால் அன்னவர்களுக்கு நல்வரவு கூறுகின்றோம். ப்ராமாணிகர்களும் வைதிகர்களும் அங்கீகரிக்கக் கூடிய வேறு நிமித்த விசேஷங்களை நன்குநிரூபிக்க முன்வருமவர்களை அடிபணிந்து ஆதரிக்கத் தடையுண்டோ? ஸ்வதந்த்ரமான வேதத்தில் நிமித்தஞ் சொல்லப் புறப்படுவது ஸாஹஸம் என்றோ அபசாரம் என்றோ க்ஷேபிப்பவர்களைப்பற்றி அடியேனுக்கு விசார லேசமுமில்லை. நிரூபிக்கும் நிமித்த விசேஷங்கள் ஊஹாணவடிவீஷிவீயஸ்ஸூக்க ளென்று தோன்றினால் அதைத் தாழாதே உபபாதிக்கலாம். இந்த விஜ்ஞாபனம் ப்ரஸ்துத விஷயமொன்றுக்குமட்டுமன்று; ஸ்வரபேதமுள்ள விடங்கள் ஏறக்குறைய நானூறு. அவ்வளவையும் எடுத்துக் காட்டி நிமித்த விசேஷங்களை நிரூபிக்கவே போகிறேன். அவையெல்லாம் தமிழில் வெளிவரா விடினும் வைதிக மநோஹராவில் க்ரமேண வெளிவந்தே தீரும். கீதாவஸாதத்தில் 'இதம் தே நாதபஸ்காய' என்கிற ச்லோகத்தின் முடிவில் 'நச மாம் யோऽப்யஸூயதி' என்றதுண்டே; அத்தகையரல்லாத அதிகாரிகள் உகப்பது போதும். இனி அடுத்த விமர்சத்தில் செல்வோம்.

## அஜாநாம் பத ஸ்வர விமர்சம்.

239. 'யஜ்ஞஸ்ய ஜாநாத்' என்கிற வாக்யம் இரண்டாவது காண்டம் முதல் ப்ரச்நத்தின் முதலநுவாகத்திலும், ஐந்தாவது காண்டத்தின் ஐந்தாவது ப்ரச்நத்தின் முதலநுவாகத்திலும் ஸமரூபமாக ஓதப்பட்டு வருகிறது. ஸ்தல பேதமே யொழிய ஆநுபூர்வீ பேதமில்லை. அஜாநாம் என்பதற்கு ஸ்வர பேதமுமில்லை. அநுதாத்த-உதாத்த-ஸ்வரிதங்கள் சேர்ந்த பதம். அஜஸ்ய அஜயோ: அஜாநாம் என்று அஜசப்தத்தின் ஷஷ்டீபஹுவசநரூபம். இதற்கு உள்ள ஸ்வரம் யுக்தமானதே.

240. இனி நாலாவது காண்டத்தின் ஆரும் ப்ரச்நத்தில் (35ஆம் பஞ்சாதியில்) 'ஆஜாநம் தே உலவாராஜாநா ஃவொஃவா' என்றவிடத்தில் மட்டும் அஜாநாம் என்பது ஸர்வாநுதாத்தம்: இதற்கு என்ன நிமித்தமென்று ஆராய

வேண்டும். அடியேனுடைய வேத விசார நூல்களில் அவகாஹனமுள்ளவர்கள் 'இந்த பதம் ஸுபந்தபதமாக இருக்கமுடியாது' என்று ஒரே க்ஷணத்தில் நிச்சயித்து விடுவர்கள். ஸுபந்தமாயிருந்தால் ஸம்போதனத்தில் தவிர ஸர்வாநுதாத்தமாக இருக்க மாட்டாதென்று நாம் கண்டறிந்து வெளியிட்டிருக்கிறோம். அநேகாக்ஷரங்களைக் கொண்ட ஸுபந்தபதமாயிருந்தால் அதில் ஒரே ஸ்வரமிராது; இரண்டு ஸ்வரங்களோ மூன்று ஸ்வரங்களோ கலந்தே தீரும் இப்படி நாம் கண்டறிந்து வெளியிட்டிருக்கும் நியமத்தை சிதிலமாக்கக் கனவிலும் நினைக்கவேண்டா; ஏழாவது காண்டம் நாலாவது ப்ரச்நத்தில் *ஜெஷ்ஹாவவ தௌவதா* என்னுமநுவாகத்தின் முடிவான (மம) என்கிற பதம் விஸஜாதீயமாய் ஸர்வாநுதாத்தமாயிருக்கிறதே, யென்று சங்கித்தவர்களுக்கு விடையிறுத்திருக்கிறோம்; *ஷுவவஹவ்ஹவஹெ *ஹாதுவுஉதிவீதெஶஹவதீ * இத்யாதி ஸ்தலங்களையுங் காட்டி விளக்கியிருக்கிறேன். அது மேலே வரும். அநேகாக்ஷரஸுபந்தபதமெதுவும் ஸர்வாநுதாத்தமாக இராதென்பதைத் தெய்வக் கட்டளையாகக் கொள்ளுங்கள். *இஷேத்வாநுவாகத்தில் சுஹியாஃ என்கிற ஸுபந்தபதம் ஸர்வாநுதாத்தமாயிருப்பதன் மருமத்தை அடியேன் நன்கு விவரித்திருப்பதை மறந்து ஆக்ஷேபிக்கப் புகவேண்டா. ப்ரக்ருதே. அஜாநாம் என்கிற பதம் ஸர்வாநுதாத்தமாயிருப்பது கொண்டே இது திஙந்த பதம் என்பதை அநாயாஸமாக அறியலாம். திஙந்த பதங்களுக்குத் தானே ஸர்வாநுதாத்தத்வம் ஔத்ஸர்க்கிகம். (ஜூா சுவவொயநெ) என்கிற தாதுவில் (பரஸ்மைபதியில்) லங்லகாரத்தில் உத்தமபுருஷைகவசன ரூபம் அஜாநாம் என்பது. இதற்கு லோகத்திலும் பஹுள ப்ரயோகமுள்ளது. சுஹிஜூாதவாநவூ என்று ஸாயணபாஷ்யமும் காணலாம். ஆக அஜாநாம் என்பதற்கு வஹுவஙவடிசெவு ந திஜஊ வடிசெவுந வ உண்டான ஸ்வரபேதத்தை நிரூபித்தோமாறோம்.

## இனி சுஜிவடிஸ்வர விமர்சம்

241. சுஜி என்கிற பதம் ஸம்ஹிதையில் மூன்றிடங்களில் ஓதப்படுகிறது இரண்டிடங்களில் ஸர்வாநுதாத்தம்; ஓரிடத்தில் மட்டும் அந்தோதாத்தம். (4—2—20) *ஐஂ தெ தஜிஷ்ஹூ...விதுஜி ஷுஜுக்ஃ* என்றவிடத்திலும் (7—4—51) *யவ்ஹாயெமவ்ஹாயா வஷதஷேவா சுஊஜதெதஷிஙஜி ஷுஜாவதெ* என்றவிடத்திலும் ஸர்வாநுதாத்தம். (2—6—69* (ஷாஜாஃ விதுஹுஃ ஷுயயாதெ சுக்ஷ.நூஜி சுவாஷெவ ஷுயதா ஹவீஂஷி* என்ற ஓரிடத்தில்தான் அந்தோதாத்தம்.

242. இந்த ஸ்வரபேதத்திற்கு நிமித்த விசேஷம் இனி நிரூபிக்கப்படுகிறது. சுஜி என்பதற்கு புஜிக்கக் கடவை என்று பொருள், இது திஙந்தபதம். சுதூ என்பது இதனுடைய பஹுவசன ரூபம். இவை அநுதாத்தமாகக் காணுமிடங்களில் நிமித்த விசாரம் அநபேக்ஷிதம். ஔத்ஸர்க்கிக ஸ்வரமென்பதை மறக்கவேண்டா. இனி அந்தோதாத்தமாகக் காணுமிடமொன்றே. *ஷாஜாஃவிதுஹுஃ*

என்ற ருக்கில் மேல்பாதம் *அக்நா ச்ச ஹுயதா ஹவீம்ஷி* என்பது. இதில் (அக்) என்கிற திஙந்தபதம் அந்தோதாத்தமாயிருப்பது பாதாதியாயிருப்பது பற்றியே. பாதாதியாயிருப்பது மட்டுமன்று, வாக்யாதியாயுமுள்ளது. இப்படியுள்ள விடங்களில் ஸ்வர நியமம் சிறிதும் வழுவாமல் பரிபாலிக்கப்பட்டு வருவதைக் கண்டதனாலேயே வேதம் அபௌருஷேய மென்பதை நாம் நிலையிட்டோமென்று ஆயிரமுறை கூறினாலும் புநருக்தியாகாது. அக்வருமிடங்கள் இன்னுமிருக்கலாம்.

243. உ—என்று ஓரெழுத்தான ஒரு பதம். இது பன்முறையும் வருவது. எங்கும் அநுதாத்தமே ஆறுவது காண்டம் முதல் ப்ரச்நத்தின் முடிவில் *தஸ்ராவாஸ்மு* என்ற விடத்திலும், ஏழாவது காண்டம் ஐந்தாவது ப்ரச்நத்தில் *தவா ஹ* என்றவிடத்திலும் (ஸம்ஹிதை மட்டும் ஓதினவர்களுக்குத் தெரியாமல்) பத பாடத்திலுள்ளதான உவ்வும் அநுதாத்தமேயாகும். முதல் காண்டம் நாலாவது ப்ரச்நத்தில் *யத்வோ அா ஹவ்யதெ ஜாதவெத உ லோகம்* என்னுமோரிடத்தில் மட்டும் (உ) உதாத்தம். இது அபூர்வமானது. இதற்கு நிமித்தம் பாதாதித்வமேயாகும். வேறு நிமித்த மென்று சிலர் சொல்லவந்தாலும் இந்த நிமித்தம் கண்ணழிவற்றதேயாகும்.

## — இந்த்ராக்நீவத்ஸ்வரவிசாரம் —

244. இந்த்ராக்நீ என்கிற பதம் ஸ்தலபேதேந மூவகைப்பட்ட ஸ்வரங்களையுடையதாக ஓதப்பட்டு வருகிறது. இந்த்ரா என்னுமிரண்டெழுத்தும் அநுதாத்தமாய் (க்நீ) என்கிற ஓரெழுத்துமட்டும் உதாத்தமாயிருப்பது முதல்வகை. (2) மூன்றெழுத்தும் அநுதாத்தமாயிருப்பது இரண்டாவதுவகை. முதலெழுத்து உதாத்தமாயும், நடுவெழுத்து ஸ்வரிதமாயும், கடையெழுத்து ப்ரசயமாயுமிருப்பது மூன்றாவது வகை. இம்மூவகைக்கும் (அதாவது—இப்படி மூன்று விதமான ஸ்வரபேதங்கள் ஒரே பதத்தில் அமைந்ததற்கு) உண்மையான நிமித்தங்களை இனி யுணர்த்துகிறேன். ஊன்றி நோக்கவேணும். இந்த்ராக்நீவத்தில் அந்தோதாத்தம், ஆத்யுதாத்தம், ஸர்வாநுதாத்தம் என்று மூவகையை நெஞ்சிற் கொள்க. இந்த பதத்திற்கு அந்தோதாத்தத்வ மொன்றே ஸ்வபாவஸித்தம். ஔத்ஸர்க்கிக ஸ்வரம் அதுவேதான். ப்ரதமாவிபக்தியிலும் ஸம்போதனத்திலும் த்விதீயாவிபக்தியிலும் இந்த ரூபமுள்ளது. ஸம்போதனத்தில் ஸர்வாநுதாந்தமாயிருக்கை ஸித்தம். அந்த ஸம்போதநம் வாக்யமத்யே இருந்தால்தான் ஸர்வாநுதாத்தம்; வாக்யாதியில் இருந்தால் ஆத்யுதாத்தம் இவ்விரண்டு நிமித்தங்களுமில்லாத விடத்தில் அந்தோதாத்தம். இவற்றுக்கு அடைவே லக்ஷ்யஸ்தலங்கள் காண்மின்.

245. இந்த பதத்திற்கு அந்தோதாத்தத்வமொன்றே ஸ்வபாவஸித்தமென்று சொன்னோமாதலால் அதற்குரிய லக்ஷ்ய ஸ்தலங்களைக் கேளீர். (1-1-22) *அயாஸவ இந்த்ராக்நீ ஜெ* (1-6-12 லும் இதே வாக்யமுள்ளது.) (4-6-15 லும் இதே வாக்யமுள்ளது ஸ்வரத்தில் மாறுதல் கிடையாது.) (2—1—34.) *இந்த்ராக்நீ ஸவ ஹ ரா ம பெபெ ந* (2—2—) முதல் அநுவாகத்தில் அஸகூஸ

*இந்த்ராக்நீ ஜே வவச்சஃ க்ருணுதாம்* *இந்த்ராக்நீ சவா ப்ருஹஸ்பதிஃ* *விசாகே நக்ஷத்ரமிந்த்ராக்நீ* இந்த வாக்யங்களில் உள்ள அந்தோதாத்தம் இயற்கையானது. (5—3—6) *இந்த்ராக்நீ ஜ்யோதிஷ்மதீ இந்த்ராக்நீ தேவ தேவானாமோஜோஹ்ருதௌ* என்கிற இந்த வாக்யத்தில் இந்த்ராக்நீபதம் இருமுறையுள்ளது. இரண்டிலும் ஸ்வரபேதமுமுள்ளது. இரண்டாவதான இந்த்ராக்நீபதம் ஸ்வாபாவிக ஸ்வரத்திலிருப்பதால் அங்கு விசாரமில்லை. முதலதான இந்த்ராக்நீ பதம் ஜ்யோதிஷ்மதீ வடிதமானதாகையாலே சம்போவாதத்திலுள்ள ஸ்வரம் கொள்ளப்பட்டது. புரோவாதம் எங்கேயுள்ளதென்ருல், அடுத்தபடியாக நாம் ஆத்யுதாத்த ஸ்தலங்களை யெடுத்துக் காட்டப் போகிருேமாகையால் அங்கே கண்டு கொள்வது. *ப்ரயதீ யச்சதம் இந்த்ராக்நீ* *இந்த்ராக்நீ நவதிம் புரஃ* *யஜ்ஞேனேவோ ஹவா ஹஹ இந்த்ராக்நீ* *இந்த்ராக்நீ ரோசநா திவஃ* *இந்த்ராக்நீ தாவிஷ்ண்வவச்சஃ* *இந்த்ராக்நீ ரோசநாதிவஃ* என்னுமித்த இடங்களில் ஆத்யுதாத்தமாயிருப்பதற்கு நிமித்தம் பலகால் நாம் தெரிவித்த வாக்யாதித்வமே. வேறு நிமித்தமில்லை.

246. இவ்விடத்தில் ஒரு நுட்பம் தெரிவிக்கிறேன். நாலாவது காண்டம் இரண்டாம் ப்ரச்நத்தில் முடிவான அநுவாகம் *இந்த்ராக்நீ ரோசநாதிவஃ* என்பது இதில் இந்த்ராக்நீ பதம் முதலில் மட்டும் ஆத்யுதாத்தம். மேலே *ப்ரேந்த்ராக்நீ விச்வ* என்றவிடத்தில் அது ஸர்வாநுதாத்தம். பதபாடத்தைத் திடமாக ஓதினவர்களுங்கூடப் பலர் க்ரமபாராயணத்தில் ப்ரேந்த்ராக்நீ என்ற விடத்திலும் ஆத்யுதாத்தமாகச் சொல்லி விடுவதுண்டு. அது தவறு. அது ஸர்வாநுதாத்தமே. ஆத்யுதாத்தமாகச் சொன்னலும் ஸம்ஹிதையோடு விரோதியாது. தாராளமாகச் சொல்லலாம். ஏன் அப்படி ஓதுவதில்லை யென்று விமர்சித்தால் நம்முடைய நிர்ணயமே தஞ்சமாகும். ஸ்வரபேதத்திற்கு நிமித்தமான வாக்யாதித்வம் இங்கு இல்லாமையாலே ஸர்வாநுதாத்தமே சொல்லியாகவேண்டும்

## அஸாநிபதஸ்வரபேத விமர்சம்

247. அஸாநி என்கிற திஙந்தபதம் ஸர்வாநுதாத்தமாக (5) இடங்களிலும், ஆத்யுதாத்தமாக ஓரிடத்திலும் ஓதப்படுகிறது. (1—5—2) *ஸோக்நிரப்ரவீத் பாக்யஸாநி* (5—2—50) *தயா ஸப்ரவிரேண வஷட்கரோதி ஸயுக்ஸ்ஸாநீதி* (5—5—9) *ஸ்ருத்வா ந்ஸாநீதி* (5—7—3) *வஷட்காரம் ஜ்யாதி ஸயுக்ஸ்ஸாநீதி* (6—2—16) *ஸஹஸ்ரேணவஸநுநாஷயிஷ்ய திரஸாநீதி* ஆக இந்த ஐந்திடங்களிலும் (அஸாநி) என்பது ஆகக்கடவேனென்று பொருள் படுமதான திஙந்தபதம். ஔத்ஸர்க்கிகமான ஸர்வாநுதாத்த ஸ்வரத்திலுள்ளதாகையாலே விமர்சப்ரஸக்தியில்லை. (2—5—12) *நக்ஷத்ரவிஹிதாஃஸஸாநீதி* என்ற ஓரிடத்தில் மட்டும் ஆத்யுதாத்தம். இதற்கு நிமித்தமேதென்னில்; ஊன்றிக் கேட்கவேணும்; ஒரு க்ரியாபதம் இரண்டிடத்தில் அந்வயிக்க வேண்டியதாயிருந்தால் அதை ஜ்ஞாபனம் செய்வதற்காக, அந்த க்ரியாபதத்தை இரண்டு தடவை ப்ரயோகியாமல் ஸக்ருதேவ ப்ரயோகித்து அதில் உதாத்தஸ்வரயோகத்தைச் செய்து விடுவதுண்டு. ப்ரக்ருத வாக்யம் *தே ஸுக்ருதாம் வா ப்ரஜாவந்தோ நக்ஷத்ர

விஹிதாஉஹஸவாநீத்ருஸாவஹுவீக விதுவிஹிதாஉஹஷிதி* என்றுள்ளது. இங்கு ஆராவாவ்ருயிவிகள் வாம் வேண்டுவது விஷயம். ஆு²லோகத்தை சுவெள என்றும், வ்ருயிவியை ஐய மென்றும் நிர்தேசித்திருக்கிறது [சுஹம நக்ஷது விஹிதா சுஹாநீதி சுவெள சுவு வீக; சுஹமவிதுவிஹிதா சுஹாநீதி ஐயஉவு வீக] என்று இங்கு விவக்ஷிதம். அஸாநி என்கிற க்ரியை இரண்டு வாக்யத்திலும் இருக்கவேண்டும்; இல்லை. ஸகாுதேவ ஹயோகித்து இது மேல் வாக்யத்திலும் அநுஷங்கித்துக் கொள்ளவுரியது என்பதை வேத புருஷன் ஸ்வரபேதத்தினுல் காட்டிவைத்தான். அஸாநி என்கிற க்ரியைக்கு இப்படிப்பட்ட இடம் ஒன்றே யாதலால் இந்த ஓரிடத்தில் மட்டும் ஆத்யுதாத்தமாயிற்று.

ஹஸாமாக சுவிஜதவடிஹுரவிமஶம்

218. சுவிஜத என்கிற திஙந்தபதம் ஓரிடத்தில் ஸர்வாநுதாத்தம், ஓரிடத்தில் ஆத்யுதாத்தம். (5—6—17) *ஹதிஹ்ஷாம நாவிஜத ஸ* என்ற ஓரிடத்தில் ஸர்வாநுதாத்தம். (7—4—25) *ஸொவிஜத்ஹஜாஉஹிஸெளஷாஸாநஹவக* என்ற ஓரிடத்தில் ஆத்யுதாத்தம். ஸர்வாநுதாத்தத்வம் திஙந்தங்களுக்கு ஔத்ஸர்க்கிகமாகையாலே அங்கு விசாரமில்லை. ஆத்யுதாத்தம் வந்தவிடத்திற்கு நிமித்தமேதென்னில்; ஒரு கர்த்ருபதம் இரண்டிடத்தில் அந்வயிக்கவேண்டியதாயிருந்தால் (அதாவது ஒரு வ்யக்திக்கு இரண்டு லாபம் சொல்லுவதாயிருந்தால்) க்ர்த்ருபதத்தை இரண்டு தடவையன்றி ஒரே தடவை பரயோகித்து அதில் உதாத்த ஸ்வரயோகத்தைச் செய்துவிடுவதுண்டு. ப்ரக்ருதம் *வஸிஷ்ஷொஹதவருஹ்ருஉ காயதாநவாகத்தில் வஸிஷ்ட முனிவர் வுதுவஹ்ரியையும் ஸெளசாஸர்களின் சுஹிவத்தையும் விரும்பி ஒரு இஷ்டி செய்தார். அதனுல் இரண்டு பேறுகளையும் அவர் பெற்ருர். இதை ஜ்ஞாபனம் செய்வதற்காகவே முந்தின க்ரியையில் உதாத்த ஸ்வரயோகம் செய்தது. *ஹொவிஜத ஹஜாடி* என்கிற இவ்விடத்தில் சிலர் அவிந்ததவை ஸர்வாநுதாத்தமாக மருண்டு சொல்லிவிடுவர்கள். அது தவறு. ஸம்ஹிதையும் அதற்கு இடம் கொடுக்காது.

* ஊுதஷ்ரணுதாஹவா விமஶ: ‖

219. ஊுத: என்கிற பதத்திற்கு நிமித்த பேதத்தாலே மூன்றுவித ஸ்வரங்கள் (ஸ்தலபேதேந) ஓதப்பட்டு வருகின்றன. *தாஹஜஷஉஐஜம யது ஊுதவுமஸராணா:* இங்கு ஸம்போதனமாகையாலே ஸர்வாநுதாத்தம். (யது) என்கிற க்ரியாபதத்தைக் கொண்டு ஸம்போதனமென்று எளிதாக அறியலாம். *ஊுத:ஷரணுதாஹவடி* என்றவிடத்திலும் மருத: பதம் ஸம்போதநமாயிருக்கச் செய்தேயும் வாக்யாதியிலிருப்பதனுலேயே உதாத்தஸ்வரயுக்தமாயிற்று ச்ருணுத என்கிற அடுத்த க்ரியா பதத்தினுவ் இது ஸம்போதநமென்பதை ஸ்பஷ்டமாக அறியலாம். *ஹவுறணாஜெவ ஊுத:* இத்யாதி ஸ்தலங்களில் ப்ரதமாவிபக்தியாகையாலே (அநுதாத்தோதாத்த ஸ்வரிதங்களாகிற) இயற்கையான ஸ்வரமுள்ளது. ஆக, இந்த இயற்கையான ஸ்வரம் மாறுபடுவதற்கு நிமித்த பேதங்களைத் தெரிவித்தோமானேம் (தொடரும்.)

Rgd. No. 2975 ஸ்ரீராமாநுஜன்

## P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்தவுரைகள்
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்தவுரைகள்
3. ஸகல பூர்வாசார்யஸ்தோத்ர வுரைகள்
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்
5. இதிஹாஸ புராண சரித்திர நூல்கள்
6. ரஹஸ்யார்த்த விளக்க நூல்கள்
7. வேதாந்தப் பொருள் விளக்கநூல்கள்
8. வேதலக்ஷணவிசார நூல்கள்
9. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க நூல்கள்
10. லோகாபிராம உபந்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய வெளியீடுகள்
13. வடமொழி நூல் திரள்கள்
14. ஹிந்தீ பாஷையில்
15. தெலுங்கு பாஷையில்
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**

**KANCHEEPURAM-3.**

437. Sri Vengeepuram Raghavacharya Swami,
Melkote,
Mysore State.

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.

Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, Kanchipuram-3.